பரமபதி துணை.

# அரிச்சந்திர புராணம்

## மூலமும் - உரையும்.

---

பாயிரம்.

### கணேசர் வணக்கம்.

எழுசீர்க்கழி நெடிலடியாசிரியச் சந்தவிருத்.

பெரும்புகழ் பெறவும் பெருந்துயர் கெடவும்
பிரியமாம்பல வரம்பெறவுமே
விரும்பிய தனம்பெற மிகுபெரும் பதம்பெறவும்
விளங்கிய தவஞ்செய மகிழ்ந்தே
கரும்பவல் பெரும்பய றருங்கனி ரசங்கொடு
நுகர்ந்தினி துவந்தருள் புரிந்
திருங்கய முகனசதங்கையொடு கிண்கிணி
யிலங்கிய பதம்பெறுவமே.

(இ-ள்.)

பெரிதான புகழினைப் பெறவேண்டியும், (நீங்கற்கு) அரிதான துக்கங்கள் கெடவேண்டியும், எனக்கிஷ்டமானவைகள் பலவும் சித்தியாக வேண்டியும், மனோ இச்சைப்படி திரவியலாபம் பெறவேண்டியும், நன்மை மிகுவதாகிய பெருதற்குரிய பதவியை அடையவேண்டியும், இவைகளுக்குத் தக்க தவங்களைச் செய்யவேண்டியும், மண்ட கரும்பு-அவல் - பெரும்பயறு - அரியகனிகள் ஆகிய இவைகளின் ரசங்களைக் கொண்டு புசித்து அந்தரசத்தின் இனிமைபோலவேவந்து திருவருள் செய்து (ஆண்டருளும்படி) பெரிய யானைமுகக்கடவுளுடைய சிறிய சதங்கைகளோடு கிண்கிணிகளும் விளங்குகின்ற பாதங்களை வணங்கப் பெறுவேன். என்றவாறு. (க)

கலிவிருத்தம்.

பரிதி தன்குலத் தில்வரு பார்த்திவன்
விரிதரும் புகழ்மேவரிச் சந்திரன்
சரித மன்னுந் தமிழ்க்குத் துணைசெயக்
கரிமு கன்பதங் கைதொழு தேத்துவாம்.

இ-ள். சூரியனுடைய குலத்திலே பிறந்த அரசனை நீண்ட கீர்த்தி யைக்கொண்ட அரிச்சந்திரமகாராஜனுடைய சரித்திரமாகிய பாவிற்

தமிழ்ப் பாடல்களுக்கு இடையூறில்லாமல் உதவிசெய்யும்பொருட்டு யானைமுகக்கடவுளுடைய பாதங்களை இருகரங்களையுங் குவித்துக் கும்பிட்டுத் துதிசெய்யக் கடவோம். எ-று. (௨)

## பரமசிவன்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சீர்கொண்ட பெருங்கமலத் திசைமுகனு
நெடுமாலுஞ் சிவனு மென்னப்
பேர்கொண்ட மூவுருவு மிருவுருவு
மோருருவாய்ப் பிறங்குந் தொல்லை
நீர்கொண்ட வண்டத்துந் தாவரத்துஞ்
சங்கமத்து நிறைந்து நின்றோன்
ஏர்கொண்ட தாளிணைக டமைக்கொண்டு
அன்பினொடுந் தலைமேற் கொள்வாம்.

இ-ள். புகழினைப்பெற்ற அழகுபொருந்திய தாமரைமலரிலே வீற்றிருக்கின்ற பிரமனும், உலகளந்தருளின விஷ்ணுவும், பரமசிவனும் என்று சொல்லப்படுகிய பெயர்களைக்கொண்ட மூன்று திருவுருவங்களும், பார்வதி பரமசிவனென்கிற இரண்டு திருவுருவங்களும் ஏகரூபமாகி, விளங்குகின்ற பழமையான நீரினையுடைய கடலாற் சூழப்பட்ட அண்டங்களிலும் சராசரங்களிலும் பூரணமாகி நிற்கின்ற கடவுளுடைய மலர்போன்ற இரண்டு பாதங்களையும் மிகுதியான பக்தியுடனே எமது சிரத்தின்மேலே சூடிக்கொள்வோம். எ-று. (௩)

புகலரிய சதுமறையாய் மறைப்பொருளாய்
[illegible] பூதமைந்தாய்
அகிலமுமா யகிலவுயிரா யணுவிலணு
வாயவற்றி னகமாய் [illegible]
பகலிரவென் றறியவொணாப் பராபரமாய்
அறுசமய [illegible]
சகலமாய் நிட்களமாய் நின்றோன்றன்
[illegible] கதியால்.

இ-ள். சொல்லுதற்கரிய நான்கு வேதங்களாய், அந்த வேதார்த்தங்களுமாய், முப்பத்திரண்டு பக்ஷத்துக்களுமாய், பஞ்சபூதங்களுமாய், உலகமுமாய், உலகத்திலே நிலைகொண்ட சர்வப்பிராணிகளுமாய், அணுவுக்கு அணுவுமாய், அவைகளுக்கு உள்ளுமாய், புறமுமாய், பகலென்றும் இரவென்றும் அறியக்கூடாத பராபரவஸ்துவாகி, ஆறுவகைச் சமயப் பிரிவுகளுமாய், சகலவஸ்துவுமாய், நிஷ்களவஸ்துவுமாய் நிற்கின்ற கடவுளுடைய அழகிய தாமரைமலர்போலும் பாதங்களையே கதியாக அடைவோம். எ-று. ஆல் - அசை. (௪)

ஆதியா யண்ட பகிரண்டத்து
மப்புறத்து மடங்கா தப்பா
னீதியாய் மணியொளியும் பாற்சுவையு
மெனவனைத்து நிறைந்து நின்றும்
பாதியோர் பொன்னாகி யருவாகி
யுருவாகப் பரந்து மல்குஞ்
சோதியின் முருந்தாட் கனையத்தி
வருகுட்டப் பரவிந்த துமேயம்.

இ-ள். சராசரங்களுக்கெல்லாம் முதலாய, இந்த அண்டத்திலும் வெளியண்டத்திலும், இவ்விரண்டுக்கும் அப்புறங்களிலும் அடங்காம லிருக்கின்ற நிறைவாய, மணிகளிலே ஒளியும், பாலிலே சுவையும்போல எல்லாவற்றிலும் வியாபித்திருந்தும், பார்வதியோடு கூடிய பாதிவடிவ மாயும் தானே ஒருமுதலுமாகி, அருவமுமாகி உருவமுமாகிப் பரவி விளங்குவதான பரஞ்சோதிஸ்வரூபனானவன், நான் என் தலைமேலே சூடிக்கொள்வதாகத் தனது திருவடிகளைச் சூட்டுதற்குத் துணிவுகொண்ட புரிசுத்தன். எ-று. (௫)

## உமாதேவி.

கனத்தாள்வெங் கயமுகனுங் கந்தனுஞ்சம்
பந்தனும்பா லுண்ட குடப்
தனத்தாளே யறம்வளர்த்த கரத்தாளே
திரிபுரங்க டழலாய்வேவச்
சினத்தாளே சிறியோர்கள் செய்பிழை
பொறுத்தருள்கை செய்யுஞ் செய்ய
மனத்தாளே நின்கமல மலர்த்தாளை
யென்றலைமேல் வைத்தாள் வாயே.

இ-ள். கனமான கால்களையுடைய வெவ்விய யானைமுகக்கடவுளும் முருகக்கடவுளும், சம்பந்தமூர்த்தியும் பால் குடிப்பனவான குடங்களை போலும் கொங்கைகளை யுடையவளே! முப்பத்திரண்டு தருமங்களை யும் வளரச்செய்தருளின கைகளையுடையவளே! முப்புரங்களும் நெருப பாகி வேகும்படி சோதித்தவளே! அறிவீனர்கள் செய்கிற குற்றங்களைப் பொறுத்துத் தயவுசெய்வதான செம்மையுள்ள மனத்தையுடையவளே! உனது தாமரை மலர்போலும் பாதங்களையே அடியேனுடைய சிரசின் மேலேவைத்து அடிமைகொள்ளக்கடவாய எ-று. (௬)

## விநாயகக் கடவுள்

வையமாய்வான் முதக்தானை மறவினைப
த்துரந்து வாழ்வை யென்று
மெய்யாய் வான் முதக்தாலும் வேதத்
மாதையும் விதிக்க வென்றே

# அரிச்சந்திர புராணம் மூலமும் உரையும்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இ-ள். கூர்மையான பற்களைக் கொண்ட முகத்தையுடைய யானை [illegible]படி ஜயித்து வாழ்வைப் பெறுவது எக்காலத்தும் சத்தியமேயாகும். இது, பலஇடங்களிலும், வேதங்களிலும், ஆகமங்களிலும், சொல்லுகின்றதல்லவாவென்கக்கொண்டு, வண்டுகள் மொய்க்கின்ற மதம்பொருந்திய கஜமுகாசுரனைத் தூளாகும்படிச் சண்டைசெய்து அவனது கொடுந்தொழிலை முடிவுசெய்த நீண்டுள்ள துதிக்கையை யுடைய யானைமுகக் கடவுளைப் பகலிலும் இரவிலும் தியானிப்பவர்களுக்கு. எ-று. (எ)

## முருகக் கடவுள்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இ-ள். யானையே! நீ காலாட்களோடு கூடியிருக்கிற பெருமையினாலும் உனது வேகத்தோடு கூடின ஆரவாரத்தாலும் உன்னுடைய வயத்த மூப்பினாலும் மேகம்போலவே விளங்குவதான உனது கறுத்த திருப்பத்தினாலும் கடுமையாக அஞ்சாதிருக்கிற உன் கண்கள் சிவந்திருக்கிறதினாலும் உனது உக்கிரத்தினாலும் உன்னைக்கண்டு அஞ்சேன். எருமைப் பாலைப் பாகத்திலும் வெள்ளாட்டுப்பால் கொஞ்சமாயிருந்தாலும் போதுமென்றெண்ணி முருகனல்லாதோரை மதியேன். யாதினாலென்றால், அன்புகொண்டு முருகனேறி வருகிறமயிலும், அம்முருகன் போர்செய்கிறதற்குரிய வேலும், எல்லாவரங்களையுந் தருகிற பரமசிவனுடைய குமாரனான முருகனும் எனது மனதிலே எப்போதும் உண்டாயிருத்தலால். எ-று. (அ)

## காளியம்மன்

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இ-ள். நீரையும் விலைக்கு வாங்குவார்கள்; அதுபாலோடு கூடியிருந்தால், பதரையும் வாங்குவார்கள்; நெல்லோடு கூடியிருந்தால், நாரையும் வாங்குவார்கள்; பூவோடு கூடியிருந்தால். வேரையும் வாங்குவார்கள்; அந்தவேரிலே கொஞ்சம் பரிமள முண்டாயிருந்தால். அப்படியே சிறப்பாக அங்கீகாரஞ் செய்வார்கள்; புன்சொல்லா யிருந்தாலும் செஞ்சொல்லோடு கூடியிருந்தால். அப்படிச் செஞ்சொல்லோடு கூடாத எனது புன்சொல்லை யாவர்தாம் அங்கீகரிப்பார்கள்? ஒருவரும் அங்கீகரியார்க ளென்பதைச் சிறிதும் தெரியாமல் நான் நாவை அலைசத்துப் பாடலானேன். எ-று.

(ஆனாலும், பெரியோர்கள் அங்கீகரிக்க வேண்டுமென்பது கருத்து.) ()

புருடனோர்க் கேந்திழையாள் பொருளுரைப்ப
தெனப்பிறர்தம் பொருளை வௌவுந்
திருடனோர் மேலவருக் கறமுரைப்ப
தெனச்சிறிய தெள்கு துள்ளிக்
கருடனோர்க் குப்பறவை கற்பிப்ப
தெனமைந்தங் கண்ணுளார்க் குங்
குருடனொர் வழிகாட்ட லெனப்பெரியோர்
முன்சிறியேன் கூற லுற்றேன்.

இ-ள். தன் நாயகனுக்கு மனைவியானவள் விவேகம் சொல்வது போலவும், அன்னியருடைய பொருள்களையே எப்போதும் திருடுகிற கள்வனானவன் மேலோருக்குத் தருமநீதி சொல்வது போலவும், சிறிய கொசுவானது கிளம்பிப் பறந்து கருடப்பட்சிக்குப் பறக்குஞ் செய்கையைக் கற்றுக்கொடுப்பது போலவும், அநேகங் கண்களையுடையவர்களுக்குக் குருடன் வழிகாட்டுவதுபோலவும் பெரியோர்கள் முன்னே மிகச் சிறியேனாகிய நான் பாடத்தொடங்கினேன். எ-று. (கஉ)

## ஆக்கியோன்பெயர் முதலியன.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தண்கவிகைக் குரிசிலரிச் சந்திரன்றன்
சரிதமதைத் தாரணியோர் விரும்ப மெய்த்த
வண்கவிஞர் வகைவகையே வகுத்துரைத்த
வடமொழியுந் தென்மொழியின் வழுவி லாத்
வெண்கவியுங் கண்டரங்கின் மாத ராடல்
விதங்கேட்டு மழையெனவே வெருண்டு சோலைக்
கண்கவிகள் குதிபாயு நெல்லூர் வீர
கவிராஜ னிவ்விருத்தக் கவிசெய் தானே.

இ-ள். குளிர்ந்துள்ள வெள்ளைக்குடையையுடைய அரிச்சந்திர மகாராஜனது சரித்திரத்தை உலகத்தாரெல்லாம் சந்தோஷத்தையடைய அழகான வித்துவான்கள் சொல்லுங் கிரமப்படியே சொல்லிப் பாடின வடமொழியிலுள்ள பாடல்களையும், தென்மொழியிலே யாதொரு தோஷங்

களு மில்லாத வெண்பாவாலான பாடல்களையும் பரிசோதித்து, பெண்கள் ஆடுகிற இடத்துண்டான மத்தள ஓசையைக்கேட்டு அவ்வோசையை மேகத்வனியென்று பயந்து சோலைகளிலே குரங்குகள் குதித்து ஓடுவதான நெல்லூரிலேயிருக்கிற வீரகவிராஜனென்பவனே இப்படி விருத்தகவியாகப் பாடினான். எ-று. (கரு)

விதியினர சிழந்தவரிச் சந்திரன்றன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்த பாக்கி
அதிவிதமாங் கலியுகத்தில் வருச சாப்த
மாயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
நமன்றமேதர் புல்லாணித் திருமான் முன்மேலை
சக்கரதீர்த் தக்கரைமேன் மண்ட பத்து நல்
கதிதருசீர் நெல்லூர்வாழ் வீர னாசு
கவிராசன் கவியரங்க மேற்றி னானே

இ-ள். ஈசுவர செயலினாலே தனது அரசாட்சியை விட்டுப்போன அரிச்சந்திர மகாராஜனுடைய பெரிய கதையாகிய வெண்பாவாலான பாடல்களை விருத்தப் பாடல்களாகச்செய்து, பலவிதங்களும் தோன்றுகின்ற கலியுகத்திலே வருவதான சாலிவாகன சகாப்தம் ஆயிரத்து நானூற்று நாற்பத்தாறும் வருஷத்திலே நன்றாக வேதங்கள் ஆராய்ந்து சொல்லுகின்ற திருப்புல்லாணித்திருமால் சந்நிதியின்மேல சக்கரதீர்த்தக் கரைமேலிருக்கிற மண்டபத்திலிருந்து நல்லகவியைத் தருவதான சிறப்பையுடைய நெல்லூரிலே வாழ்கின்ற வீரனென்னும் ஆசுகவிராஜன் அந்த விருத்தப்பாடலான அரிச்சந்திர புராணத்தை அரங்கேற்றுதல் செய்தான். எ-று (கசா)

பாயிரம் - முற்றிற்று.

---

# நாட்டுச்சிறப்பு.

---

கலிநிலைத்துறை.

முன்னூ றியாப் பிறவிக் குருடான மூடன்
தன்னாற் றெருட்சா கரத்தினிடஞ் சாற்று மாபோல்
மன்னு லறிதக்க தன்றென்னினு மன்னர் மன்ன
னன்னாட் டணியான் சிலவல்ல நடத்த லுற்றேன்.

இ-ள். முதலிலே வழிதெரியாத பிறவிக்குருடனான ஒருவனாலே பள்ளமான சமுத்திரத்தினிட வகைகளெல்லாங்கண்டு சொல்லத்தொடங்கினதுபோல, என்னாலே தெரிந்துசொல்லத்தக்கது அல்லவென்றாலும், ராசாதிராசனான அரிச்சந்திரனுடைய நல்ல நாட்டுச்சிறப்பை நான் சிலவற்றைக் கூடியமாத்திரம் சொல்லத்தொடங்கினேன். எ-று.

தடம்பாற் கடலா ரமுதங் கெழுமித் தழைத்து
நடம்பாற் புகுந்தா லெனவந்துவர் வேலை நண்ணி
உடம்பாற் புனலுண் டெழுந்தோங்கிய காள கூடம்
விடம்பாற் பரந்தா லெனமேக மெழுந்த தன்றே.

இ-ள். குளிர்ந்த திருப்பாற்கடலிலே அரிதான அமுதமுண்டாகிச் சிறந்து தனக்கு உறவாகையினாலே லவண சமுத்திரத்துக்கு வந்தாற் போலவந்து அந்தக் கடலில் நீரையுண்டு, முன்னாளிலே எழுந்து இளம் பிணவிடமானது ஆகாயத்தி னிடமெல்லாம் பரவினதுபோல, மேகம் மேலே கிளம்பியது. எ-று. (உ)

அடியும் முடியுந் தெரியா திருண் டண்ட மெங்குங்
கொடியுங் குடையு மெனமா முகிற் கூட்ட மீண்டிப்
படியும் விசும்பும் பகைத்தா லெனப் பார விற்கோத்
திடியுந் துளியுங் கணையாய்ப்பெரி செய்த தன்றே.

இ-ள். கீழும்மேலும் தெரியாதபடி இருண்டு ஆகாயமெல்லாம் நீலக் கொடிகள் பறந்தாற் போலவும் நீலக்குடைகள் விரித்தாற் போலவும். நீலமேகக் கூட்டங்கள்கூடி பூமியும் ஆகாயமும் பகைத்துச சண்டை செய்தாற்போல் கனமான இந்திரவில்லிலே கூட்டி இடிகளும் துளி களும் அம்புகளாக மிகவும் எய்கிறதுபோற் பெய்தன. எ-று. (௩)

மீனந் திகழ்வே லையிற் றோன்றிய தேன்ன விண்ணோர்
தானந் திகழ் * தாத் திரியைப் பெருந் தாழியாக்கி
வானந் தனைநெய் யரிவட் டகையாக்கி விட்ட
பானந் தனையொத்து விழுந்தது மாரி யம்பல்.

இ-ள். மீன்கள் சஞ்சரிக்கின்ற கடலிலே தோன்றியது வண்டாகிய தென்று தேவர்களாகிய மதுவடிப்போர்கள் சராசரங்களுக் கிடமாக விளங்குகின்ற பூமியைப் பெரிய பானைபோலிருக்கிற சுரைக்குடுக்கை யாகக் கொண்டு ஆகாயத்தை அந்தக்குடுக்கைமேலே மூடுகிற பன்னா டையான கிண்ணமாகச்செய்து அக்கிண்ணத்திலே ஊற்றுகிற மதுவா னது பலசில்லிகளாலும் ஒழுகுகிறதுபோல் ஒழுகினமேகத்திற் சொரிந்த துளிகள். எ-று. (௪)

விண்ணிற் பொழியுங் கணைமாரி விழுந்து தைத்த
புண்ணிற் பொழியுங் குருதித் திரள்போலு மெங்கு
மண்ணிற் பொலியிந் திரகோப மலிந்து தோன்றக்
கண்ணிற் கடையா புனல்வந்து கலித்த தன்றே.

இ-ள். மேகத்தாலே பெய்கிற பாணவருஷங்கள் விழுந்து அவை கள் பட்ட புண்ணினின்றும் சிந்துகிற ரக்தத்திரளைப்போல் எவ்விடத் தும் பூமியிலே அக்காலத்திலே தோன்றுகிற இந்திரகோப பூச்சிகள் மிகுந்துவிளங்க கண்களுக்கடங்காத ஜலப்பிரவாகமாகி ஆரவாரித்தது.

* ராத்திரி

கள்ளங் கொலைகட் புலைகாம மென்றைந்து மற்றார்க்
குள்ளந் தெளிந்தோர் குருபூத தமதான மென்னப்
பள்ளந் திடர்மால் வரைகானகம் பக்க மெங்கும்
வெள்ளம் பெருகிப் பரந்தோடி விரைந்த தன்றே

இ-ள். களவு - கொலை - கட்குடி - பொய் - மிக்ககாமம் என்று சொல்லுகிற பஞ்சமாபாதகங்களையும் ஒழிந்த நல்லோர்களுக்கு மனந் தெளிந்தவர்கள் கொடுக்கிற உத்தமதானம்போல் பள்ளம் மேடு உயர்ந்த மலை காடுகளாகிய பக்கங்களெல்லாம் அந்தப் பிரவாகமானது பெருகிப் பரவி ஓடி வேகங்கொண்டது. எ-று. (௬)

காரவிக் கணமாமழை பெய்து கலித்த வெள்ளம்
பரவிப் பலகோடி பருப்பதக் கோடோடித் தாங்
கருவித் திரள்புக் கடங்கா திரைத்தோடி யார்த்துச்
சரயுத் தனிமேலை தலைவைத்துச் சரித்த தன்றே.

இ-ள். பூலோகத்துக்குத் துணைக்காரணமாய்க் கூட்டங்கொண்ட நீலமேகங்கள் பொழிதலாலே ஆரவாரித்து அந்த ஜலப்பிரவாகம் எங்கும்பரவி அநேககோடி மலைச்சிகரங்களை முறித்து அந்தச்சிகரங்களினின்றும் வருகிற அலைக்கூட்டமானவை இறங்கிக் கட்டுக்கடங்காமல் ஆரவாரித்து ஓடிப் பின்னும் முழங்கிச் சரயுநதியிலேவந்து கூடி வரலாயிற்று. எ-று. (௭)

ஆரங் குளவஞ்சி யசோகு பலாசந் தேவ
தாரம் வகுளங் கடுச்சண் பகஞ்சாதி கன்னி
சாரஞ் சுரபுன்னை கடம்பகஞ் சூதம் வேய்கர்ப்
பூரம் பனையோடு புரண்டிடப் போய தன்றே.

இ-ள். சந்தனமரம் - முசிவஞ்சிமரம் - அசோகுமரம் - பலாசமரம் - தேவதாரமரம் - மகிழமரம் - கடுமரம் - சண்பகமரம் - சாதிலிங்கமரம் - கோங்கமரம் - சுரபுன்னைமரம் - பேரீந்துமரம் - மூங்கில்மரம் - கற்பூரவள்ளி - அரசமரம் - ஆகிய இவைகளுடனே அலைகள்புரள வந்தச சரயுநதி சென்றது. எ-று. (௮)

ஏலந் தகர மிலவங்க மரித்திரந் தக்
கோலம் வசவாசி செங்குங்கு மங்கோட்டம் வாரித்
தாலம் பதினாலு நடுங்கிடச் சாரந்த ஊழிக்
காலந் தனின்மோது கருங்கட லொத்த தம்மா.

இ-ள். ஏலம் - தகரம் - இலவங்கம் - அரித்திரம் - தக்கோலம் - வசம்பு - செங்குங்குமம் - கோட்டம் - ஆகிய இவைகளையெல்லாம் வாரிக்கொண்டு உலகம் பதினாலும் நடுங்கும்படிவந்த ஊழிக்காலத்திலே அலைகள் மோதுகிற கருங்கடலை அந்தச்சரயுநதி ஒத்தது. எ-று. (௯)

---

வசவாசி - வசம்பு.

நீலம் வைரம் வைடூரிய நித்தி லஞ்செங்
கோலந் திகழ் துகிர் கோமளப் பத்ம ராகந்
ஞாலந் தனில்வந் தவிந்திர சாப மென்ன
கூலந் திகழ்சர யுக்கரை கீறிக் கோடிற் றன்றே.

(இ-ள்.) நீலம் - வைரம் - வைடூரியம் - முத்து - சிவந்த நிறமாக விளங்குகின்ற பவளம் அழகான பதுமராகம் - ஆகிய இந்த ரத்நங்களாலே உலகத்திலே நீண்டுவருவதான ஒரு இந்திரவில்லைப்போல் ஒளிமிகுந்த அந்த சரயுநதி செல்லுதலாலே கரைகளை உடைத்துக்கொண்டு ஓடியது.

கலி விருத்தம்.

ஆடு நாகமு மத்திக ளும்வரை
யாடு நாகமு மத்திகை யேபுன
லோடு நாகமு முற்றிட லானதி
யோடு நாகமு மேந்தியை யொத்ததே.

இ-ள். ஆடுநாகமும் - படமெடுத்தாடுகின்ற பாம்புகளும், அத்திகளும் - எலும்புகளும், வரையாள் - மலைமகள், தன் - பாதியிற்கலந்த, ஆகமும் - திருமேனியும், அத்தி - அப்பாதி வடிவினளது, கை - கையிலே பிறந்த, புனலோடு - கங்கையோடு, நாகமும் - புன்னைமலரும், உற்றிடலால் - பொருந்துதலால், ஆடுநாகமும் - ஆடுகின்ற வானரங்களும், அத்திகளும் - அத்திமரங்களும், வரையாடும் - வருடைகளும், நாகமும் - யானைகளும், அத்திகையே - அவைகொண்டு போகப்பட்டதினையே, புனல் - நீரின்கண்ணே, ஓடு - ஓடுகின்ற, நாகமும் - பாம்புகளும், உற்றிடலால் - பொருந்துதலினாலே - நதி - சரயுநதியானது, ஓடும் - கபாலத்தையும், நாகமும் - மேருவையும், ஏந்தியை - ஏந்திய கடவுளை ஒத்தது.

கடவுண்மேற் செல்லுங்கால் வரையாடு நாகமெனற்பாலது அடிமடக்குஞ் சிலேடையுமாதலின், ஒருவடிவி னொப்புமைபற்றி வரையாடு நாகமெனப்பட்டது. (சக)

அம்ம டங்களு மாழி களுங்கெழு
மம்ம டங்களு மொப்பவை யன்றதின்
மும்ம டங்களும் வெல்லு முதிர்கய
மும்ம டங்களுங் கொண்டு முடுகிற்றே.

(இ-ள்.) அம்மடங்களும் - நீர்முழுவதும், ஆழிகளும் - கடலின்கண்ணே செறிந்தெழாநின்ற அழகிய ஊழித்தீயையும், ஒப்பதையன்றி - நிகர்வதையன்றி, அதின் - அதினும், மும்மடங்களும் மூன்றுபங்குமாக, வெல்லும் - வெல்லாநின்ற, முதிர்கயமும் - பருத்த யானையையும், மடங்களும் - அதனை வெல்லுஞ்சிங்கத்தையும், கொண்டு தன்கண்ணே சேர்த்துக்கொண்டு, முடுகிற்று - விரைந்து சென்றது.
ஈ ஆ.

அம்மடங்களும் முடுகிற்று எனக் கூட்டு (சஉ)

வீயும வேங்கையு மந்தியு மேதகு
வீயும வேங்கையும் மந்தியு வீழ்பலாக்
காயும பாலையில் கைக்கய முங்கொடு
காயும பாலையில் வந்து கலந்ததே.

இ-ள். வீயும் - பறவைகளும், வேங்கையும் - புலிகளும், மந்தியும் - குரங்குகளும், மேதகுவீயும் - மேம்பாடுபொருந்தியமலர்களும், வேங்கையும் - வேங்கைமரங்களும், மந்தியும் - வண்டுகளும், வீழ்பலாக்காயும் - விரும்பப்பட்டபலாக்காய்களும், பால் - தன்பக்கங்களில், அயில் - நீருண்கின்ற, கை - துதிக்கையையுடைய, கயமும் - யானைகளும், கொடு - கொண்டு, காயும் - சுடுகின்ற, பாலையில் - பாலைநிலத்தில், வந்துகலந்தது - வந்துகூடிற்று. எ-று.

அயில் ஐயிலெனப் போலியாய் வந்தது. (கசு)

தேரு மாறுண ராச்சின வேடர்பேய்த்
தேரு மாறுமுட் டேறரும பாலையில்
ஊரு மாதரி யாரையு முந்திமான்
ஊரு மாதரி தாடொழு துற்றதே.

இ-ள். தேருமாறு - தெளியும்வழியை, உணரா - அறியாத, சின வேடர் - கோபத்தையுடையமறவர், பேய்த்தேரும் - கானலையும், ஆறும் - வெள்ளத்தையும், உள் - உள்ளே, தேறரும - பருத்தறிதல்கூடாத, பாலையில் - பாலைநிலத்தில், ஊரும் - அங்குள்ளஊர்களையும், மாதரியாரையும் - மகளிர்யாவரையும், உந்தி - தள்ளிக்கொண்டு, மான் - கலைமானை, ஊரும் - நடத்துகின்ற, மாதரி - பத்திரகாளியினது, தாடொழுது - தாளை வணங்கி, உற்றது - பொருந்திற்று. எ-று. (கஎ)

இறவங் கோங்க மிருப்பையின் பூந்துணர்
இறவங் கோங்க வெரிமின் மினியெனப்
புறவ மேய்ந்த சுரம்விட்டுப் போய்ச்செழும்
புறவ மேய்ந்தது பூம்புன லாறரோ.

இ-ள். அங்கோங்கம் - அழகியகோங்கினுடையவும், இருப்பையின் - இருப்பையினுடையவும் பூங்கொத்துகள், இற - கெடவும், இறவு - இருமீன்கள், அங்கு ஓங்க - மேலெழவும், எரி - நெருப்பு, மின்மினியென - மின்மினி போலத்தோன்றவும், புறவமேய்ந்த - புறாக்கள் மேய்ந்த, சுரம்விட்டு - பாலைநிலத்தைவிட்டுப்போய், செழும் - செழித்த, புறவம் - முல்லைநிலத்தில், ஏய்ந்தது - பொருந்தியது, பூம்புனலாறு - அழகியநீரையுடைய ஆறானது. எ-று. (கஅ)

ஆடு மாசுரை யாவினை யாழநீர்
ஆடு மாசுரை யாவினை யோடவே
கோடு குத்திக் குலைத்தது கொன்றையின்
கோடு குத்திக் குலைத்துணர் வாரியே.

இ-ள். ஆடும் - முழுகுதற்குரிய, மாசுஉரையா - குற்றஞ்சொல்லப்படாத, இடையாழம் - நடுவாழத்தையுடைய, நீர் - நீரானது, ஆடும்-ஆடுகளும், மா - பெரிய, சுரையா - கறவைப்பசுக்களும், விடை - எருதுகளும், ஓட - அஞ்சியோடும்படியாக, கொன்றையின் - கொன்றைமரங்களின், கோடு - கிளைகளை, உகுத்தது - முறித்தது, இக்குலை - இக்காய்க்கொத்துகளையும், வாரி - சேர்த்துக்கொண்டு, கோடு - கரைகளை, குத்தி - மோதி, குலைத்து - அழித்தது. எ-று. (கக)

அண்டர் தோயலை வாரி மராவழீஇ
அண்டர் தோயலை வாரியிற் சார்ந்தணி
கொண்ட லைத்தரிக் குங்குருந் திற்கலை
கொண்ட லைத்தரிக் கொத்த குடிஞையே.

இ-ள். அண்டர் - ஆயரது, தோயலை - தயிரை, வாரி - கொள்ளையிட்டு, மரா - மராமரத்தை, அழீஇ - அழித்து, அண்டர் - தேவர்கள், தோய் - மூழ்காநின்ற, அலை - அலைகளையுடைய, வாரியில் - கடலின்கண்ணே, கடல்போல்சார்ந்து - கூடி, அணி - அலங்கரிக்கப்பட்ட, கொண்டலை - மேகத்தை, தரிக்கும் - தரிக்கின்ற, குருந்தில் - குருந்தமரத்தில், கலைகொண்டு - ஆய்ச்சியராடைகளைக்கொண்டு, மான்களைத் [illegible] அலைத்து - அலைசெய்து, அரிக்கு - திருமாலுக்கு, ஒத்த - ஒத்தது, குடிஞை - அவ்வாறானது. எ-று.

ஒத்தது என்பது ஒத்தவெனக் கடைகுறைந்து நின்றது. (உ0)

உறவ ணங்கு மராவு முழக்கிவான்
உறவ ணங்கு மராவு மொசித்தது
மறைவ ணங்கு மரியை வணங்கல்போல்
மறைவ ணங்கு மரியை வணங்கியே.

இ-ள். உற - மிகவும், அணங்கும் - வருத்துகின்ற, அராவும்-பாம்புகளையும், உழக்கி - வருத்தி, வானுற - மேகந்தவழ, வணங்கும் - வளைந்திருக்கின்ற, மராவும்-மராமரங்களையும், ஒசித்தது-ஒடித்தது, மறைவு-மறைதல், அண் - பொருந்திய, நம் - நமது, குமரியை - கொற்றவையை, வணங்கல்போல் - முன்பாலையில்வணங்கினமைபோல், மறை - வேதத்தினாலே, வணங்கும் - வணங்கப்பட்ட, அரியை - திருமாலை, வணங்கி-முல்லையில்வணங்கி. எ-று. (உக)

ஆவி யன்ன பெடைகலந் தன்றிலும்
தூவி யன்னமுந் துன்னிய நாரையும்
மேவி யின்பம் விடாத நெடும்புனல்
வாவி சூழ மருதம் புகுந்ததே.

இ-ள். உயிரையொப்பான பெட்டையன்றில்களும் ஆணன்றில்களும் இறகையுடைய அன்னங்களும் நெருங்கியிருக்கிற நாரைகளும்

கூடிச்சந்தோஷம்விலகாதிருப்பதான அந்த நெடிதான சரயுநதிப்பிரவாக மானது குளங்கள் சூழ்ந்துள்ள மருதநிலத்திலேசென்றது. எ-று. (உஉ)

வாழை பூக மகிழ்மரு தாசினி
தாழை கேசரஞ் சம்பகஞ் சண்பகவி
ஞாழன் மாதுளை நாகம விந்தகன்
சூழல் சேரத் தொலைந்தது தோயமே.

இ-ள். 'வாழைமரங்கள் - கமுக ---கள் - மகிழமரங்கள் - மருதமரங்கள் - பலாமரங்கள் - தென்னமரங்-- - பூந்தாதுக்களையுடைய சண்பக மரங்கள் - இலவமரங்கள் - குங்குமமரங்கள் - மாதுளமரங்கள் - புன்னை மரங்கள் முதலியவற்றை அந்தப்பிரவாகம் அழித்தது. எ-று. (உங)

பல்கு மே ரயும் பரந்து செறிந்தலக்
கால்கு மோ றுங் கலந்த கடும்புனல்
வால்கு மே ப்பகி ம்புக வான்பட ச்
சேல்கள் பாயுஞ் செழுந்தட மே புக்கதே.

இ-ள். அந்த மருதநிலத்தி னிடங்களெல்லாம் பரவி, அங்கங்கே பொருந்தின அந்த வாய்க்கால்களெல்லாம் கூடின வேகத்தையுடைய ஜலமானது, வாள்கள்தொங்குகின்ற எருமைகள்போய்விழ அந்த அதிர்ச்சியினாலே, ஆகாயத்தளவாக சேற்கெண்டைகள் குதித்துக்கிளறுவதான செழியதடாகங்களெல்லாம் பாய்ந்தது. எ-று. (உச)

வாவி ரேர நிரப்பி மதகினில்
தாவி நீள்கரை சாடி யுடைத்தலை
நீவி வண்டல் கொழித்து நெடும்புனல்
பாவி நீல வயலிற் பரந்ததே.

இ-ள். அப்படிக குளங்களெல்லாம் நிரம்பச்செய்து, மதகுகளிலுமோதி, நீண்டகரைகளையுந் தாக்கியுடைத்து, அலைகளாலே வீசிச்சேறுகளை ஒதுக்கி அப்பெரிய பிரவாகசலமானது எங்கும்பரவிநெடிதாகவயல்களெல்லாம் பாய்ந்தது. (உரு)

வரம்புடைத்துக் கரைந்து மடுக்களில்
குரம்புடைத்துக் குமுதமுங் கஞ்சமும்
கரும்பு மிஞ்சியு மஞ்சளுங் கட்டழித்
தரம்பை யோங்கு படப்பை யழித்ததே.

இ-ள். அந்த வயல்களிலுள்ள வரம்புகளை யுடைத்துக் கரையப் பண்ணி மடுக்களுக்குப்பாய்கிற வாய்க்கால்களையுமுடைத்து, குமுதமலர்களையும் தாமரைமலர்களையும் கரும்புகளையும் இஞ்சிகளையும் மஞ்சள்களையும் கட்டுக்குலையப்பண்ணி, வாழைமரங்கள் உயர்ந்துள்ள மருதநிலத்தூர்களையும் அந்தப் பிரவாகசலம் அழித்தது. எ-று. (உசு)

வரி சேர வுடைத்தழித் தின்கனி
வாரி யோடு வரம்பயின் றோர்தரு'

ஏரி சேர வழிந்துச் சேர்பூம்புனல்
பேரி யாறு பரந்து பெருகிற்றே.

இ-ள். பின்னும் பெரிய குளங்களையெல்லாம் முழுதும் உடைத்துக்கெடுத்து, இனிதான பழவர்க்கங்களையும் வாரிக்கொண்டுசென்று, விளைவுசெய்கின்ற உழவருடைய ஊர்கள் முழுதும் கெடுத்து அகதப்பிரவாக ஜலமானது பெரிய ஆறாகப்பரவிப் பெருகியது. எ-று. (உஎ)

நாடு மேதாறு பாய்ந்த நீர்புனல்
ஓடு மோதையு மோங்கு கரை
சாடு மோதையுங் கண்டலே வண்டுகள்
பாடு மோதையு மெங்கும் பரந்தவே.

இ-ள். அப்படி அந்தக்கோசலநாடெல்லாம் பாய்ந்தஜலமானது ஒடுகிற சத்தமும் உயர்ந்த பெரிதான கரைகளை உடைக்கின்ற சத்தமும் சோலைகளிலே வண்டுகள் பாடுகிற சத்தமும் எங்கும்பரவின. எ-று. ()

கள்ள லம்பிய வாயுங் களிமகிழ்
உள்ள லம்பிய வுள்ளமுந் தோன்றவே
புள்ள லம்பிய பொய்கைக் கரைதொறும்
மள்ளர் வந்து நெருங்கி மலிந்தனர்.

இ-ள். கள் ஒழுகுகிற வாயும், கள் குடித்ததனாலே சந்தோஷம் உள்ளே அடங்காதிருக்கிற மனமும் வெளியாக, பட்சிகள் கத்துகின்ற குளக்கரைகளிலெல்லாம் உழவர்கள்வந்து நெருங்கிக் கூடினார்கள். எ-று.

அறிவை மயக்கவல்ல மதுவை உழவர்கள் மேலுமேலுங் குடித்தலால், அஃது வாயினின் றொழுகுதலை யறியாது புந்திமயங்கின ரென்பார், "கள்ளலம்பியவாய்" எனவும், மதுவுண்போர் அஃதருந்தாதிருக்கையில் மனச்சோர்வுறுதலும், அருந்தினபின்னர்க் களிகோடலும் இயல்பாதல்பற்றி "களிமகிழ் உள்ளலம்பிய உள்ளந்தோன்ற" எனவும் கூறினர். (உக)

கொட்டு வாங்கிக் குதித்து நிவப்புமண்
வெட்டு வார்சுமப் பார்மிதித் துக்கரை
கட்டு வார்வன் கடிப்பெடுத் துக்கிணை
தட்டு வார்துர கங்கொடு தாங்குவார்.

இ-ள். சிலர் மண்வெட்டிகளைக் கொண்டு சந்தோஷமாய் மேட்டிலுள்ளமண்ணை வெட்டுவார்கள். சிலர் அந்தமண்ணைச் சுமப்பார்கள். சிலர் காலால்மிதித்துக் கரைகட்டுவார்கள். சிலர் வலிதான தோற்கடிப்பைக்கொண்டு அந்த மருதநிலப் பறையைக் கொட்டுவார்கள். சிலர் குதிரைமரங்களைநிறுத்தி வெள்ளமுடைக்காமல் கரையைக்காப்பார்கள்.

முழுவெ ழும்படி மொய்சிறை யிற்கறங்
கெழுவெ றுண்டய லென்ன மிரிந்திட

இ-ள். உழுகிற படைச்சாலெல்லாம் முத்துக்கூட்டங்கள் கிடக்கும், உழுகிறவர்களுடைய கால்களெல்லாம் தாமரைமலர் வாசமாயிருக்கும். கழுத்த எருமைக்கடாக்களின்மேலெல்லாம் அவற்றை அடிக்கிற கரும்பின்சாறொழுகுவதாயிருக்கும். அந்த எருமைக்கடாக்களின் வால்களிலெல்லாம் பலவித மலர்வாசமாயிருக்கும். எ-று. (௰௫)

போரடுத்த விதியவன் போன்றுமுன்
றாரடுத்தவ னூர்தியென் றெண்ணியே
எர [illegible] பிருசிறை யுங்கொடு
* மாரடித்திப் புள்ள மன்னமே.

இ-ள். பொருதுதல் செய்த பிரமாவானவன் சிவனுக்கு அஞ்சுதல்போல, திரிபுரத்தை யெரித்த சிவபெருமானுடைய வாகனமென்று தெரிந்து உழவர்கள் ஏரிலே பூட்டின எருதுகளை அடித்தோட்டும்போது இவ்வன்னங்கள் இரண்டு சிறகுகளாலும் தமது மார்பிலேபட அடித்துப் பறந்தோடுவனவாயிருக்கும். எ-று.

அன்னங்கள் பயந்தோடுவனவற்றை, தம்மை யூர்கிற பிரமனை வென்ற சிவபெருமானுடைய வாகனம எருதாகையால் தங்களையும வெல்லுமென்று கருதினதாகக் கூறியது தற்குறிப்பணி. இங்குப் பொருதல் செய்தவென்பது சிவபெருமானுக்கு நிகராதலை. (௰௬)

நன்றுறைத்தட நாண்மலர்த் தாமரைப்
பன்றுறைக் கதப் பகட்டின் பதக்குளம்
பொன்றுறைப்பொடி யிடமற வெங்கணும்
பொன்னுரைத்த நிறத்தகற் போன்றவே.

இ-ள். நல்ல துறைகளையுடைய தடாகங்களிலே தினந்தோறும் பூத்த தாமரை மலர்களிலுள்ள பொன்னிறமான பராகப்பொடிகளை பொருந்தியிருப்பதனாலே, பற்களிலே துறைகளையுடைய எருதுகளின கால்களிலுள்ள குளம்புகளுக்கு யாது நிகர்சொல்லத்தக்கது என்னில், அந்தக் குளம்புகள் முழுதும இடமில்லாமல் எவ்விடத்திலும் பொன்னையுரைத்த நிறத்தோடுகூடியிருக்கிற உரைகல்லை ஒத்திருக்கின்றன. எ-று.

தொக்க வேதியர்க் குந்துற வோர்கட்குந்
தக்க தானந் தருபவர் போலவே
பக்க நோக்கிப் பதமறிந் தெங்கணு
மிக்க செந்நெலும் வெண்ணெலும் வித்தினார்.

இ-ள். ஒருசேரக்கூடின பிராமணர்களுக்கும், சன்னியாசிகளுக்கும் தகுதியான தானத்தை வாரிவாரிக் கொடுக்கிறவர்கள்போல, நாலுபக்கங்களிலும் பார்த்து அவ்விடங்கள் விளைவாகிற காலபக்குவந்தெரிந்து எவ்விடங்களிலும் தகுதியான செந்நெற்களும வெண்ணெற்களும்விதைத்தார்கள். எ-று. (௰௭)

* மார்பு — மார் என விகாரமாயிற்று.

போங்க் காற்றிலே தூற்றுவார்கள். அப்படித் தூற்றின நெல்லைக் குவிப்பார்கள். பின்பு சுமந்துகொண்டு போவார்கள். எ-று. (சசு)

பகடு மட்டறப் பூட்டிப் படுத்தநெல்
சகடு முட்டவிட் டீர்த்துத் தங்குல
மகடு மக்களும் வைகுறும் வாழ்மனை
முகடு முட்ட நிறைப்பர்கண் முற்றுமே.

இ-ள். எருதுகளை அளவில்லாமற்பூட்டி மிதிப்பித்தநெல்லை வண்டிகளில் நிரம்ப ஏற்றி அவற்றை ஒட்டிக்கொண்டுபோய், தங்கள் தங்கள் குலத்து மனைவிகளும் மக்களுமிருக்கிற வாழ்வையுடைய வீடுகளின் முகடு வரையினும் முட்டும்படி நிரப்புவார்கள். எ-று. (சஎ)

நாடு தோறுமிவ் வாறு நடப்பன
காடு தோறுங் களிமயி லாடுவ
வீடு தோறுந் திருவிளை யாடுவ
கூடு தோறுங் கருங்குயில் கூவவே.

இ-ள். காடுகளிலெல்லாம் களிப்பையுடைய மயில்களாடுகின்றன அவர்கள் வீடுகளிலெல்லாம் இலட்சுமிசந்தோஷமாய் வாசஞ்செய்வாள் மரத்திலேகட்டியிருக்கிற கூடுகளிலெல்லாம் கரிய குயில்கள் இருந்துகொண்டுகூவுதல்செய்ய அந்தக்கோசலநாடுமுழுதுமிப்படிநடக்கின்றன

பெடைகி டப்பவும் பிள்ளை கிடப்பவும்
இடைகி டப்ப விளவனச் சேவல்கள்
மடைகி டக்கும் வளைமுத்தை யண்டமென்
றடைகி டப்பன வன்னப் பெடைகளே.

இ-ள். பெட்டையன்னங்களொருபுறத்திலேயிருக்கவும், குஞ்சுகளொருபுறத்திலேயிருக்கவும், இளமையான ஆணன்னங்கள்நடுவேகிடக்கின்றன. நீர்பாய்கிறமடையிலேயிருக்கிற சங்கினது முத்துக்களைத் தங்கள் முட்டையென்று நினைத்து பெட்டையன்னங்கள் அடைகிடக்கின்றன. எ-று. (சகூ)

சாயெ லாய்பரு வச்செழுஞ் சாலியின்
காயெ லாந்தின்று கன்னற் படப்பையுள்
மேய லாவிள மேதிக ளின்கடை
வாயெ லாமுத்து மாலைக ஞாலுமே.

இ-ள். கோரைகள்போல் முழுதும் விளைந்துகிடக்கிற செழுமையான நெல்லுப்பழங்களையெல்லாம் தின்று கரும்புத்தோட்டங்களிலே புகுந்துமேய்வதன்றிலே இளமையான எருமைமாடுகளின் கடைவாயெல்லாம் முத்துக்கோவைகள் தொங்கும். எ-று.

முத்தானது, மதி-மேகம்-சங்கு-சிப்பி-மீன்-நத்து-முதலை-உடும்பு-தாமரை-வாழை-கமுகு-கரும்பு-செந்நெல்-மூங்கில்-யானைக்கொம்பு-பன்றிக்கொம்பு-பகளின் பால்-நாகம்-கொக்கு-நல்லையர் கழுத்து என்னும்

இருபதிடங்களிலும் பிறக்குமென்பதுபிரமாணம். இங்கு, எருமைமாடுகள் கரும்புத்தோட்டத்துட்புகுந்து அதனைத்தின்னலால், கரும்புகளின் கணுக்களில் முளைத்திருக்கிற முத்துக்கள் அவ்வெருமை மாடுகளின் கடைவாய்களில் ஒன்றன்பினொன்றாக வொட்டிக் கோவைபோலும் தொங்குகின்றன வென்றார். (ரு0)

மட்டி லாமட வார்குடை வாவியிற்
பெட்டை யன்னம் பிரிந்து பறக்கவாய்
விட்டு றங்கிடு பார்ப்பினை மென்மலர்த்
தொட்டி லாட்டுந் திரைக ளிற்றுமால்.

இ-ள். அளவில்லாதபெண்கள் நீராடுகிறகுளங்களைவிட்டு அன்னங்கள் தூரமாய் ஓடிப்பறந்துபோக, அப்போது வாயைத்திறந்து கத்துகிற அவற்றின் குஞ்சுகளை, அலைகள்மிருதுவான தாமரைமலர்களையே தொட்டிலாகக்கொண்டு அசைத்துத் தூங்கச்செய்யும். எ-று. (ருக)

பள்ள மேற்பன சக்கனி யூறல்கள்
வெள்ள மேற்கம லத்தலர் மேல்விழ
உள்ள மேற்கமு னுண்ட வவாவியில்
வள்ள மேற்பன போல்வன வாவியே.

இ-ள். மரத்தடியாகிய பள்ளங்களிலே கிடக்கிற பலாப்பழங்களினது தேனூறலானது அங்குள்ளகுளத்து நீர்மேல் மலர்ந்திருக்கிற தாமரைமலரின்மேலே பாயுங் காட்சியானது, முன்னே மனந்திருத்தியாகக் குடித்த குளங்கள் ஆசையினாலே தொன்னைகளை ஏந்துவனபோலிருக்கின்றன. எ-று. (ருஉ)

பூகத் தின்செ ழும்பா ளையைப் புன்கவி
நாகத் தின்பட மென்று நடுங்கியே
பாகத் திற்றின்று விட்ட பலாக்கனி
மேகத் திற்புரை வெங்கதி ரொக்குமே.

இ-ள். கமுகமரத்தினது செழுமையான பாளையைப் புத்தியீனமான குரங்குகண்டு பாம்பின்படமென்று பயந்து ரசத்துடனே தின்றுகொண்டிருந்து விட்டுவிட்ட பலாப்பழமானது, மேகத்திலே மறைகிற சூரியனை ஒத்திருக்கின்றது. எ-று. (ருங)

சேறு பாய்மலர்த் தேனொடு தீங்கனி
ஊறு பாய்வவு மொண்கரும் பட்டதீஞ்
சாறு பாய்வவுந் தத்தமிற் கூடியே
ஆறு பாய்வன வங்கங் கனந்தமே.

இ-ள். நிலத்திலேசேறுண்டாக ஒழுகுகிற பூந்தேனுடனே இனிப்பானபழங்களிலூருகிற தேன்பாய்வனவும்; அழகிதான கரும்பை யாட்டின இனியசாறுகள் பாய்வனவும் தம்மி லொன்றாகக்கூடி ஆறாகப்பாய்வனவாகிய அந்தந்த இடங்களெல்லாம் அநேகமுண்டு. எ-று. (ருச)

மன்றல் தங்கு மலர்களின் மேய்ந்திளந்
தென்றல் வந்து சிந்திய தாதுகள்
குன்றில் வீழ்பொன் மழையுகுப் பூவென்னவே
முன்றிலு மம்மணி மாடமு மொய்க்குமே.

இ-ள். இளந்தென்றலானது வந்து பரிமளந்தங்கிய மலர்களிலே பரவி அங்கே உதிர்த்த பராகப்பொடிகள், மலைகளின்மேலே பெய்கிற பொன்மழைக்கூட்டம்போல் வாசல்களிலும் அழகிய வீடுகளின்மேலும் நிரம்பப்படியும். எ-று. (௫௫)

கலருப் புனைத் தினைக்கிளி யோச்சுவார்
அகல்கவ ணொன்றொ டெறியு மராமணி
பகல்வி ழுங்கள மொப்பன பாரெலாம்
குகனி ருந்த செழுந்தண் குறிஞ்சியே.

இ-ள். முருகக்கடவுள் விளங்குகிற செழுமையான குளிர்ச்சியையுடைய குறிஞ்சிநிலமெங்கும், கெடுதலில்லாத தினைப்புனத்திலே கிளிகளை ஓட்டுகிறவர்களாகிய குறவர்கள் அகன்றகவணிலேவைத்து வீசுகிற நாகரத்தனங்கள் (மேலெழுந்து விழுகிற தோற்றமானது), ஒவ்வொரு சூரியன் மேலெழுகிற காட்சியை யொத்தன. எ-று. (௫௬)

நெடிய நெய்தனி லத்தில வண்டலில்
கொடிய காதலிற் கூட விழைந்திடுங்
கடிய நீலக் கருங்க ணுளைச்சியர்
படியி லேறி வளைகண் முத்தீனுமே.

இ-ள். விசாலமாயிருக்கிற நெய்தனிலத்திலே முத்துக்களொதுங் கிக்கிடக்கிற சேற்றுநிலத்திலிருந்து, கொடுமையான காமத்தினாலே சுழியிட்டுக்கொண்டிருக்கிற பரிமளத்தைக்கொண்ட நீலமலர்போலுங் கரியகண்களையுடையவலைச்சிகள் படிமேலேறிசங்குகள்முத்தைப்பெறும்.

கலைய ளக்குங் கருங்க ணுலைச்சியர்
புலைய ளக்கு நறைக்கும் பொருந்தியே
விலைய ளப்பன வெண்முத்த மேபற
நிலைய ளக்குமப் பரதவர் நெய்தலே.

இ-ள். தருமநிலையை அளவுசெய்திருக்கிற வலையர்களுடைய நெய்தநிலத்திலே, காமநூலை அளவுசெய்து பார்க்கிற கரிய கண்களையுடைய வலைச்சிகள் இழிகுணத்துடனே அளவுசெய்து விற்கிற தள்ளுக்குச் சம்மதமாக விலைக்கு அளவுசெய்து கொடுப்பவை வெள்ளிய முத்துக்களே. எ-று. நெய்தல் கடற்சார்பு. (௫௭)

நிலம்வி ளக்கிடு நித்தில நீலவுற்
பலம்வி ளக்கிடு மையபுனல் பண்பினன்

னலம்வி ளக்கிடு நல்லவர் வாய்மொழி
குலம்வி ளக்கிடும் கோசல நாடரோ.

இ-ள். எல்லா நாட்டிக்கும் சிரேஷ்டமாக விளங்குவதான கோசல நாட்டில், முத்துக்கள் நிலங்களெல்லாம் பிரகாசித்துக்கொண்டிருக்கும். பசுமையான ஜலங்களிலே நீலோற்பலமலர்கள் விளங்கிக்கொண்டிருக்கும். நல்லோர்களுடைய வாய்ச்சொற்களிலே பிரயோசனமான நன்மார்க்கங்கள் விளங்குவதாயிருக்கும். எ-று. (ருக)

நாட்டுச்சிறப்பு - முற்றிற்று

ஆக விருத்தம் — எக.

# நகரச்சிறப்பு.

## கலி விருத்தம்.

மகர தோரண வாயிலு மாற்றிலுஞ்
சிகர மாமதி லுஞ்செறி மாரகழ்
சகரர் வண்புகழ் சாற்று மயோத்திமா
நகர மேன்மை சிறிது நவிலுவாம்.

இ-ள். மகரதோரணங்கள் கட்டியிருக்கிற கோட்டை வாசலும், மதிலுறுப்புகளும், அவ்வுறுப்புகளையுடைய பெரியமதிலுஞ்சூழ, அம்மதிலைச் சூழ்ந்தபெரிய அகழானது, இதுவே சகரர் தோண்டிய கடலென்று சொல்ல, அந்தச்சகரர்களுடைய பெரிய புகழைப் பிரசித்தப்படுத்துவதான அயோத்திமாநகரத்தினது மேம்பாட்டை (இனி எம்மாலே கூடிய வளவுக்) கொஞ்சம் சொல்லத் தொடங்குகிறோம். எ-று. (க)

மாட மாளிகை யும்மடைப் பள்ளியுங்
கூட கோபுர மும்பெருங் கோயிலும்
நாட ரங்கு மணியறச் சாலையும்
பாட லங்கரி வைகிய பந்தியும்.

இ-ள். வீடுகளும் உப்பரிகைகளும் மடைப்பள்ளிகளும் கூடங்களும் கோபுரங்களும் பெரிய அரண்மனைகளும் நடனம்பண்ணுகிற நாடகசாலைகளும் அழகிதான தருமச்சத்திரங்களும் குதிரைகளும் யானைகளும் நிற்கிற இடங்களும் மிகவுள. எ-று. (உ)

மார னன்னவர் மாமயி லன்னவர்
தார டர்ந்த புயமுந் தனங்களு
நேர டர்ந்து நெருக்கலின் வீழ்ந்தபொன்
னார மின்னுவ வாவண வீதியே.

இ-ள். மன்மதனை ஒத்த புருஷர்களும், அழகிய மயிலையொத்த சாயலையுடைய பெண்களும் ஆகிய இவர்களுடைய மாலைகள் நெருங்கிய

தேர்களும், கொங்கைகளும் நேரேபொருந்தி நெருங்குதலினாலே உதிர்ந்த பொன்னும் முத்தும் கடைவீதிகளிலெல்லாம் விளங்கிக்கிடக் கின்றனவா யிருக்கும். எ-று. (௫)

அன்பு தங்கு மனத்தரிச் சந்திரன்
றன்பு கழ்கொழுந் தோங்கித் தழைத்தல்போற்
பொன்பு ணர்குழலை யார்புலர்த் தும்மகி
லின்பு கைசென் றெழுமுக லொங்குமே.

(இ-ள்.) அன்புதங்கிய மனத்தினையுடைய அரிச்சந்திரமகாராசனுடைய புகழானது கொழுந்துகொண்டு வளர்ந்து தழைப்பதுபோல், பொன் னிறமான தேமலைக்கொண்ட தனங்களையுடைய பெண்கள் கூந்தலைக் காயச்செய்கிறதற்கு மூட்டுகின்ற அகிற்கட்டைகளின் புகையானது ஆகாய முகடெல்லாம் போய்ப்படரும். எ-று. அன்பு - தெய்வபக்தி. (௬)

மேகலை யார்ப்பென வூழி தொடர்ந்தெனச்
சேனை யார்ப்பன தேரொலி யார்ப்பன
வாசி யார்த்துறும வாம்பரி யார்ப்பன
வானை யார்ப்பன வாவண வீதியே.

(இ-ள்.) கடைவீதிகளில், மேகங்கள் முழங்குவதுபோலவும் ஊழிக் காலம் வந்தாற்போலவும் சேனைகளும் சத்திக்கின்றன. தேர்களினொ லியு முழங்குகின்றன. ஆகாயத்தை யளாவிச்செல்வதாய்த் தாவுகின்ற குதிரைகளும் அனுமானிக்கின்றன. யானைகளும் வீறிடுகின்றன. எ-று.

வேத வோதை வியன்கலை யோதையின்
கீத வோதை கிளியோதை யாடுவார்
பாத வோதை பரிபுரத் தோதையாழ்
நாத வோதை நடப்பன நாளுமே.

(இ-ள்.) வீதிகளிலே, வேதகோஷ்டங்களும், பெரிதான கலைஞான வொலியும், இனிய கீதங்களினொலியும், மூங்கிற்குழல்களினொலியும், ஆடு கிறவர்களுடைய காலிலுள்ள சதங்கைகளினொலியும், சிலம்புகளினொலி யும், வீணையிலுண்டாகின்ற கானவொலியும் நாள்தோறும் உண்டாகிக் கொண்டே யிருக்கின்றன. எ-று. (௮)

கிள்ளை பாடுவ கீதங்கள் சாரிகைப்
பிள்ளை பாடுவ வேதம் பிராமணர்
தெள்ளி பாடுவ ரின்னிசைக் கோதையர்
வள்ளை பாடுவர் மன்னவன் வண்மையே.

(இ-ள்.) கிளிகள் பாட்டுகளைப் பாடுகின்றன. நாகணவாய்ப் புட்கள் மழலைசொற்களைப்போற்பேசுகின்றன. பிராமணக்கூட்டங்கள் வேதங் களைப்பாடுவார்கள். இனிதான இசையினையுடைய பெண்கள் அரிச்சந் திரமகாராஜனுடைய உதாரணங்களை வள்ளையென்னும் பிரபந்தத்தில் அமைத்துப் பாடுவார்கள். எ-று

வள்ளையென்பது, உலக்கை யோச்சித் தந்தலைவன் வளங்கூறி மகளிர் பாடுவது. (எ)

கூடல் மேலோங்குவ கோதையர் யாவர்க்கும்
ஊடல் மேலோங்குவ தவ்வை யொருத்திக்கு
ஆடல் மேலோங்குவ கண்ணுளர்க் கன்றன்றும்
பாடல் மேலோங்குவ நித்தலும் பாணர்க்கே.

இ-ள். (அவ்வயோத்திமாநகரத்திலுள்ள) பெண்களெல்லோருக்கும் எப்போதுந் தத்தம் நாயகருடனே கூடுதல் அதிகமாயிருக்கும். மூதேவி ஒருத்திக்கு மாத்திரம் (அந்நகரின் சௌக்கியமில்லாமையா லுண்டாகிய) பிணக்கே அதிகமாயிருக்கும். நாடகிகளுக்கு அந்தந்த நாள்கடோறும் ஆடுகிறதொழிலே அதிகமாயிருக்கும். பாணர்களுக்கு நாடோறும் பாடுகிற தொழிலே அதிகமாயிருக்கும். எ-று. பாணர்-புகழ்ந்து பாடுவோர்.

பொற்பராகக் கர்ப்பூர பராகச்செம்
பற்பராக பயோதர வேசையர்
விற்பராக மிராவிடி யன்முதற்
கற்பராக நாடகங் கானமே.

இ-ள். பொன்னிறமான சந்தபொடிகளும், பச்சைக்கர்ப்பூரத் தூள்களும், சிவந்த பதுமராக மணிமாலைகளுங் கொண்ட கொங்கைகளையுடைய வேசையர்கள் தங்கள்தேகத்தை (இச்சித்த புருடர்களுக்கு) இராக்காலமுழுதும் விலைக்குவிற்பார்கள், இராகங்களும், அந்த நடனத்துக்கேற்ற பாடல்களும் விடியற்காலத்துக்கு முன்னே கற்றுக்கொள்வார்கள். எ-று. (௯)

எம்பி னண்ணி யிருந்தன யாவையும்
வம்பி னென்ன வழைப்பது மானவே
விம்மி நின்ற வியன்கொடி யெங்கணுந்
தம்பி னின்று நுடங்கித் தயங்குமே.

இ-ள். அவ்வயோத்திமா நகரத்தார்களுடைய வீடுகளின்மேலெல்லாம் மிகுந்து நிற்கின்ற சிறந்த கொடியாடைகளானவை, தமக்குள் ஓங்கிநின்று, எங்களிடத்திலே சேர்ந்திருக்கிற எல்லாப் பொருள்களையும் (ஆசையால்) கொள்ளவாருங்கள் என்று கூப்பிடுவதுபோலத் துவண்டு விளங்கும். எ-று. (௧௦)

முன்னை மாதவத் தான்முழு துக்குநல்
லன்னை யாமரிச் சந்திரன் றன்னைமா
லென்ன மேல்வளை நீண்டிய பாற்கட
றன்னை யொத்த தவளக் கொடிகளே.

இ-ள். வெள்ளைக் கொடிகளானவை, பூர்வத்திலேசெய்த பெரிய தவத்தினாலே எல்லாப்பொருள்களுக்கும் நல்ல தாய்போன்ற அரிச்சந்

திரமகாராஜனை விஷ்ணுவென்று நினைத்து மேலேசூழ்ந்துபர்வின பாற்கடலை ஒத்திருக்கின்றன. எ-று.

> திருந் நோக்கியாற் சித்திரப் பாவையை
> பொருந் நோக்கிய வன்பரை வல்லியர்
> உருக நோக்கிய மடவியர் பிணைக்குயிர்
> பருக நோக்குந யமனைப் பழிக்குமே.

இ-ள். (அநேகந்த வீடுகளில்) பிணைக்குநோக் குடையதா எழுதியிருக்கிற சித்திரப்பிரதிமைகளை, நயகளையணைக்க நோக்குவதுபோல் அணைக்கப்பார்க்கின்ற நாயகர்களை, கொடிபோலும் இடைகளையுடைய பெண்கள் மனமுருகப் பார்க்கின்ற பிணைக்குப் பார்வையானது, உயிரைக் கொள்ளகொள்ளப்பார்க்கின்ற யமனைப் பழிக்கும். எ-று.

திருக நோக்கியலாவது, முறுக்கிய முகத்தோடு பிணைக்குப் பார்வை தோன்ற விருத்தல். (௪௨)

> பரவினா னிங்குலி சத்தவன் முன்னா ளோர்க்
> கரணாலெங்கிரி சந்திர னொருவனா
> சரணமென் றடைந்த வரையீட்டம்போற்
> றிரவினா நெடிய தேரணி நிற்குமே.

இ-ள். மாறுபாட்டையுடைய நீண்ட வசிராயுதத்தைத் தாங்கிய இந்திரனுடைய மூனுவதான சண்டைக்கு, நம்மைத் துன்பநேராவண்ணம் காப்பவன் ரட்சகனான அரிசசந்திர மகாராஜனே யாமென்று அடைக்கலமென்று வந்திருக்கிற பெரிய மலைக்கூட்டம்போல், திரட்சியாய் நீண்ட குதிரைகள் கட்டிலதான தேரின் வரிசைகள் நிற்கும். எ-று.

பொன்னுட்டை கிறைவனுகிய இந்திரன், முன்னொருகால் தன் கைப்படையாகிய வசிராயுதத்தினுல் மலைகளின் சிறகுகளைச் சேதித்தனனுதலின், அன்னேன் மீண்டு மச்செயலை விளைப்பானென்னும் பீதியால் வரைகள் அரிசசந்திரனைச் சரணடைந்ததுபோலத் தேரின் வரிசைகள் நிற்கின்றனவென்னும் பொருள் தோன்ற இச்செய்யுளிற் கூறியது, அத்தேர்களினது உயர்ச்சியும் திரட்சியும் வியந்து கூறியபடி என்க. (௪௩)

> ஏம சாலையு மின்னிசைச் சாலையு
> மோம சாலையு மறச சாலையுந்
> தூம சாலையுந் தெரிவையர் மாதவக்
> காம சாலையு மெண்ணக் கில்லவே.

இ-ள். திரவியங்க ளிருக்கிற சாலைகளும், இனிய இசைநூல் கற்கிற சாலைகளும், ஓமம்பண்ணுகிற சாலைகளுடனே - தருமசத்திர சாலைகளும், புகைகள் இருகிற சமையற்சாலைகளும், பெண்களுடைய மிகப் பெரிதான காமானுபவம் பண்ணுகின்ற சாலைகளும் அநேகமிலே அளவில்லை. எ-று. (௪௪)

பிறையு மென்முலைப் பேதையர் சிற்றிடைக்
குறையு மன்றிக் குறைபிறி தில்லையே.

இ-ள். மாட்சிமைதங்கிய தாமரைமலர்களினிட்சியினையுடையநல்ல நீர்க்குளங்கள் முதலானவைகளுக்குச் சிறைசெய்வதேயன்றி, வேறு சிறைசெய்வதில்லை. சந்திரப்பிறையும், மெல்லியதனங்கள்வாய்ந்தபெண்களினுடைய சிறிய இடைகளும தேயுமேயல்லது வேறுதேய்வில்லை. ()

சிறைசெய்தல் - காவல்செய்தல். (௧௧)

பொருந்தி பாவும் புலியும் புனலுட
னருந்தி வாழ் பொருநுறை யன்றியொற்
பருந்து மைங்கிளி யும்மொரு பஞ்சரத்
திருந்து வாழ் மிரவும பகலுமே.

இ-ள். ஒருதுறையிலே மானுமபுலியுந் தண்ணீரைச்சேர்ந்து குடித்துக கூடிவாழ்வதாயிருக்கும். பருந்தும பசைகிளியும் இரவும் பகலும் அன்புடனே ஒருகூட்டிலே கூடியிருந்து வாழ்வதாயிருக்கும். எ-று. ()

பொருளுமம வேத புராணமும புந்தியிற்
றெருளுந் தானந் தியாகமும யாகமு
மருளில் மாதவ மும்பொறை யும்மறிவிச்
சருளுந் தோன்று மந்நகர் தன்னிலே.

இ-ள. அந்தநகரத்திலே, அர்த்தங்தெரிதலும், வேதபுராணங்கள் பாராயணஞ்செய்தலும், அதனாலே புத்தியிலே தெளிவுடைத்தாயிருத்தலும், தானங்கொடுத்தலும, தியாகஞ்செய்தலும், யாகங்கள் பண்ணுதலும், மயக்கமில்லாத பெரிய தவங்களசெய்தலும், சமபத்துக்கொண்டிருத்தலும், சிவகாருணியமுண்டாயிருத்தலுமேவிளங்கிக்கொண்டிருக்கும்

மேற்படி வேறு.

முத்திரு நாயக்குனிரை யாயிர மணித்தூண்
பத்திகளு மத்தொகையா மையம்பொனுறு கோயிற்
சித்திர மணித்தவிசின் முத்தணி செழுமபொற்
சத்திர நிழற்றவரி சந்திர னிருந்தான்.

இ-ள் அப்படிப்பட்ட திருநகரத்திலே வரிசையாக ஆயிரம் ரத்நத் தூண்களுள்ள மண்டபவரிசைகளும, அந்த ஆயிரமாற்றுப் பசும்பொன்னாலேசெய்திருக்கிற அரண்மனையுமாக அமைந்திருப்பதி லநேக சித்திர விசித்திரங்களாக ரத்நங்களபதித்திருக்கிற சிங்காசனத்தின்மேலே முத்துக்களாலே அலங்கரித்திருக்கின்ற செழுமையுடைய பொன்மயமான பூச்சக்கிரக்குடை நிழல்செய்ய அதனகீழே அரிச்சந்திரமகாராசன் கொலுவிருந்தான். எ-று. (௨௨)

என்னதிம் தென்னதிம் தென்றிருகை கூப்பி
மன்னவ ரிடுத்திறைகள் வந்தினி தளப்பத்

சுமியும் அழகிதான பொன்னாலாகிய அழகுகொண்டகேயூரங்களும் அழகிய தோள்களிலே விளங்கவும். எ-று. (உ௬)

சோமனை முடித்த நாதன் பராபரஞ் சுடராக
காமனிவ னென்னவொளிர் காயழகிலங்க
மாமகர குண்டல மணித்திறலில் வீசச்
சேமவுடை வாளரு திருக்கையி னிலங்க.

இ-ள். சந்திரனைச் சடைமேற் சூடிக்கொண்டிருக்கிறபார்வதிநாயகனை பரமசிவனாலே எரிக்கப்படாத மன்மதன் இவன்றானென்றுசொல்லும்படி பிரகாசிக்கிற பேரழகு விளங்கவும், பெரிய மகரகுண்டலங்கள் ரத்னங்களினுடைய சிறந்த காந்திகளை வீசவும், உயிர்க்காவல் செய்கிற உடைவாளானது திருக்கையிலே விளங்கவும். எ-று. (உ௭)

முடிப்பாடு கரத்தவர் பத்தொடு பூசு நீற்று
பொடிப்பட வடுப்படு கறுப்புநுதல் பொங்க
முடித்தலை பரத்திசை முகத்தரச ருய்த்த
வடுப்படு கறுப்பிரு மலர்க்கழல் விளங்க.

இ-ள். உடுக்கைதங்கின கையையுடைய சிவனடியார்களை வணங்கி, விபூதி தூளிசந்தோன்ற வடுவாகிய கறுப்பானது நெற்றியிலே விளங்கவும், எட்டுத்திக்குகளிலுமுள்ள அரசர்கள் கிரீடமணிந்த தலைகள்பட (அரிச்சந்திரமகாராசன் பாதங்களில்வீழ்ந்து) வணங்குதலினாலே, (அக்கிரீட) வடுவாகிய கறுப்பு இரண்டு மலர்போலும் பாதங்களில் விளங்கவும். எ-று.

அரிச்சந்திரமகாராசன் சிவனடியாரிடத்தும், எல்லாப் பாவங்களையும் போக்கவல்ல விபூதியினிடத்தும் மிகப் பற்றுடையவரென்று இச்செய்யுளால் விளங்குகிறது. சார்வதாகாலமும விபூதியையள்ளி நெற்றியிலே பூசுதலினாலுண்டாகிய வடுத்தோன்றுமெனபார் "பொடிப்பட வடுப்படு கறுப்புநுதல் பொங்க" என்றார்.

சிவனடியார்களின் பெருமையினை,

"எவரேனுந்தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமுங் கண்டாலுள்கி, யுவராதேயவரவரைக் கண்டபோது உகந்தடிமைத்திறநினைந்தங் குவந்துநோக்கி, இவர்தேவரவர்தேவ ரென்றுசொல்லி யிரண்டாட்டாதொழிந்தீசன் றிறமேபேணிக், கவராதேதொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே."—என்னும், திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த தேவாரப்பதிகத்தானறிக.

விபூதியணிதலினா லுண்டாகும் சிறப்பினை

"வேதத்திலுள்ளதுநீறு வெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறு புன்மைதவிர்ப்பதுநீறு

விண்மின்னென வலையும்பரிவெண்ணூலணி மார்பன்
கண்முன்னொரு மறையோனதிகாவேவொடெதிர்வந்தான்.

இ-ள். பூமிதேவிபோல்வருகிற என்மனைவியையும், என்மகனையும் பொருளுள்ள நீங்கள் வாங்கிக்கொள்ளுங்களென்று விலைகூறிக்கொண்டு வருகிற அரசன் சொல்லக்கேட்டு ஆகாயத்துள்ள மின்னற்போல்விளங்குகின்ற கேயூரந்தாங்கினவனும் வெள்ளைமுப்புரிநூலணிந்த மார்பையுடைய அரிச்சந்திரனது கண்ணுக்கு முன்னே ஒரு வேதப்பிராமணன் அதிக திருட்டுத்தனத்துடனே எதிரிலேவந்தான். எ-று. (௨௯)

என்சொல்லினை முனசொன்னவையின்னம்பகரெனவே
மென்சொல்லியையிளமைந்தனைவிலைகூறினனெனவே
முன்சொல்லுநின்சேயையுமடமானையும்விற்கும்
பொன்சொல்லெனவிறல்வேலினன்மறையோனொடுபுகல்வான்.

இ-ள். (ஓ விலைகூறினவனே!) யாது சொன்னாய்? முன்னே சொன்னவைகளை இன்னமொருதரஞ்சொல்லென்று கேட்கவே, அரசன் இந்த மிருதுபாஷியான இவளையும், இளமையான புத்திரனையும் விலைகூறினேனென்று அரசன் சொல்லுமளவில், உன் பிள்ளையையும் பெண்டாட்டியையும் விற்பதான பொருள் எவ்வளவு சொல்லென்று கேட்க, அதற்கு வெற்றிவேலைக்கொண்ட அரசன் அந்தப்பிராமணனுடன் சொல்லுகிறான். எ-று. (௩௦)

களபப்பிடர்மிசைநின்றெறிகவணிற்படுசிலைபோ
மளவுக்கிருநிதிநல்கிடினதுவேவிலையென்றா
னாதப்பொருண்முழுதும்முனதுரையின்படிதருவேன்
தாவத்திருநகையாளொடுமகனைத்தரியென்றான்.

இ-ள். யானை முதுகின்மேலநின்றெறிகின்ற கவணிலுள்ள கல்லானது போகுமளவுக்குச் சரியாகப் பெரிதான திரவியங்கொடுத்தால் அதுவே இவ்விருவருக்கும் விலைப்பொருளென்று சொன்னான், அதற்கு அவ்வளவு பொருள்முழுதும் என்னிடத்துண்டு; உன்சொற்படியே இந்த முல்லையரும்புபோன்ற அழகிய பல்வரிசையையுடையவளுடனே மகனையும் நீ கொடுப்பாயானால் தருகிறேனென்று (அவ்வந்தணன்) சொன்னான். எ-று.

கலிவிருத்தம்.

இருவருக்குமிதுவிலையாமெனிற்
பொருளளிப்பனின்றென்றுபுகன்றிடத்
தருகவப்பொருளானெனச்சாற்றலும்
வெருவிலந்தணன்மீளவுங்கூறுவான்.

இ-ள். இந்த இரண்டுபேருக்கும் இதுவே விலைநிச்சயமானால் நானே அவ்வளவு பொருளுந்தருகிறேன் இப்போதேயென்றுசொல்ல, அவ்வளவு பொருளுங்கொடுமென்று அரசன் சொல்லுமளவில், அஞ்சுதலில்லாத அந்தப்பிராமணன் மறுபடியும் சொல்லுகிறான். எ-று. (௩௧)

உண்மகிழ்ந்தின்றளிக்கு முறுபொருள்
கொண்மர் தமமையமைமெனக் கூறினன்
வெண்மனத்தனென்வெள்ளியைக் கூய்ப்பந்
நுண்மறைக்குலத்தோன்முகநோக்கியே.

இ-ள். நான் மனங்களித்துக்கொடுப்பதான விலைப்பொருளைவாங்கிக் கொள்ளுகிறவனை இங்கே கூப்பிடென்று சொன்னான் உடனே வெள்ளைப்புத்தியுள்ளவனைகிற அந்த சுக்கிரனைக் கூப்பிட்டு அந்த சூட்சுமமான பொருளுடையவேதகுலத்துப்பிராமணனைப்பார்த்து எ-று.

இவர்தமக்களியென்றலுமீவனென்
றவர்தமக்கவனங்கையறைந்தன
னுவரிசூழ்புவிமன்னவனுற்றுநீர்
கவருமாநிதிகைபுக்கதோவென்றான்.

இ-ள். இந்தப் பிராமணனுக்கு நீர் கொடுமென்று சொல்லவே, கொடுக்கிறேனென்று அந்த பிராமணன் தனக்குக் கையைத் தட்டிக் கொடுத்தான். அப்போது கடல்சூழ்ந்த வுலகத்தையாளுகின்ற அரசனு வரிச்சந்திரன் நீர் எனக்குக் கொடுத்து வாங்கிக்கொள்ளத்தக்க பெருந்திரவியம் உம்முடைய கைவசம் ஆயிற்றோவென்று கேட்டான். எ-று. (௧௪)

வந்ததென்பொருண்மாதையுஞ்சேயையு
மந்தணற்களித்தாவணநல்கென
முந்தவாவணந்தீட்டிமுடிந்தபின்
மைந்தனோடுமயிலைவழங்கினான்.

இ-ள். அதற்கு எனக்குவரவேண்டிய பொருள்வந்தது; உன்மனைவி யையும் மகனையும் இந்தப்பிராமணருக்குக் கொடுத்து விலைச்சீட்டு எழுதிக் கொடென்றுசொல்ல, முன்னே விலைச்சீட்டெழுதிக் கொடுத்தான். பின்பு பிள்ளையையும் மனைவியையும் கொடுத்தான். எ-று. (௧௫)

வல்லிபோற்றிவருந்தலெமக்கென
சொல்லிவேற்கட்டுளிபலசிந்திட
வல்லிமாமரைத்தாள்களையன்புடன்
புல்லிவீழ்ந்துகிடந்துபுலம்பினாள்.

இ-ள். அப்போது சந்திரவதி கணவனைத் துதித்து எங்களுக்காக நீர் வருத்தங்கொள்ளாதிருமென்று சொல்லி வேல்போன்ற கண்களிலே பலநீர்த்துளிகள் சிந்த தனது நாயகனுடைய அகவிதழ்களைக்கொண்ட பெரிய மலர்போன்ற பாதங்களைப்பிடித்துக்கொண்டு அன்புடன் விழுந்து கிடந்து புலம்பலானாள். எ-று. (௧௬)

நின்றுகாணுநிருபரும்யானுமன
றன்றுகாணவவாவுறுசெம்முக
மின்றுகாணுகவெய்தியதன்றிமற்
றென்றுகாண்பினியெனவேங்கினார்.

இ-ள். நின்று உரைமைக்காணவருகிற அரசர்களும் நாளும் அந்த அந்த நாள்தோறும் பார்க்க வேண்டுகிற சிவந்த முகத்தை இன்றைத்தினம் காணக் கிடைத்ததேயன்றி இனி என்றைக்கு நான் காணக் கிடைக்குமென்று பலபலவிதங்களுஞ் சொல்லிப் பிரலாபித்தாள். எ-று. (௯௭)

ஏங்கிமன்னனிடை வனென்றேபடர்
தாங்கிநாயகதாவிடையென்றயல்
நீங்கினிறைநீர்கழுத்தைத்தழீஇத்
தூங்கிவாய்விட்டுத்தோன்றலரற்றினான்.

இ-ள். நமை நினைத்து அரசன் ஏங்கிவருந்துவானென்று உள்ளே துன்பங்கொண்டு நாயகா! உத்தரவு கொடென்று தூரப் போனான். அப்போது மகன் அரசன கழுத்தைக் கட்டிப்பிடித்துக்கொண்டு தொங்கி வாய்விட்டுக் கதறி அழுதான். எ-று. (௯௮)

எமையவென்னையுமியாயையுந்தாங்கிய
சுமையிறக்கினையோசுகமுற்றதோ
வுமையணைந்திங்குறவென்றிருந்தவா
றமையுமோவையனேயென்றரற்றினான்.

இ-ள். எங்களையனே! என்னையும் என் தாயையும் ரட்சித்துக் கொண்டுவந்த சுமையை யிறக்கிக் கொண்டீரோ! இப்போதுமக்குச் சுகமாயிற்றோ! நாங்களுடனே சேர்ந்து இங்கே உறவென்றிருந்தபடி போதுமோ! என் ஐயனே! என்று மகனனவனழுதான். எ-று. (௯௯)

கழுத்தைப்பூண்டழுங்காவலன்கைகளை
யழுத்தமாமபற்றறவிடுவித்தனன்
விழித்தக பொறிசிந்தி வேதிய
னிழுத்துப்போய்த்தனதில்விடமெய்தினான்.

இ-ள். கழுத்தைக்கட்டிக்கொண்டழுகின்ற புத்திரனுடையகைகளை அழுத்தமாகிய பிடிப்புப்போகநீக்குவித்தவனாகி திறந்துபார்க்கிறகண்களிலே நெருப்புப்பொறிகள்சிந்த அந்தப்பிராமணன் அப்புத்திரன்கையைப் பிடித்துத் தன்வீட்டுக் கிழுத்துக்கொண்டு போய்ச் சேர்ந்தான். எ-று.

கடியவேதியன்கைதொட்டிழுத்தவக்
கொடுமைகண்டுகுலைகுலைந்தேங்கியே
யிடிவிழுந்தமராமரமீதெனும்
படிவிழுந்தனன்சற்றும்பதைத்திலன்.

இ-ள். அப்படிக்கடினசித்தனான பிராமணன் புத்திரன் கையைப் பற்றி யிழுத்துக் கொண்டுபோன அந்தக் கொடுஞ் செய்கைப்பார்த்து அரசன் நடுநடுக்கமாய் அழுது இடிவிழுந்தலான மராமரம் இதுதானென்னும்படி கீழேவிழுந்தான்; சற்றேனும் உடம்பசைதலில்லாது அப்படியே கிடந்தான். எ-று. (௱)

வந்துமந்திரிமன்னனைத்தாங்கிபு
புந்தியில்லவர்போலப்புலம்புவ
தெந்துகாரணமென்றடிபோற்றலுஞ்
சிந்தைவாட்டமுங்கோட்டமுந்தேறினான்.

இ-ள். அப்போது சமீபத்திலே மந்திரியானவன்வந்து அரசனையெடுத்து அரசே! நீர் புத்தியில்லாதவரைப்போற் பிரலாபிக்கிறது என்ன காரணம் என்றுசொல்லிப் பாதங்களை வணங்கும் போதில், அரசன் மனத்திலுள்ளவாட்டமும் மனக்கோணலுந்தீர்ந்து தெளிந்தான். எ-று.

அந்தணன்முகநோக்கியரும்பொருள்
வந்ததோவென்றுமன்னன்விளம்பயா
னிந்தமாநிதிபெற்றனனின்னமுஞ்
சிந்தையோடுரைசெய்வதொன்றுண்டென்றான்.

இ-ள். அப்போது அரசனாகிய பிராமணன் முகத்தைப்பார்த்து உமக்குஎன்றுலேகிடைக்கவேண்டிய அருமையானபொருள்வந்துசேர்ந்ததோவென்று அரசனைகேட்க, இந்தப்பெரிதானபொருள்பெற்றுக்கொண்டேன்; இன்னமும் என்மனசாரச சொல்லுவதொன்றுண்டென்றான்

முனிக்குமுன்னமொழிந்தபொனீந்தனை
யெனக்குங்கூலியீயுவதென்னென
வுனக்குமருவன்வாவெனவுத்தமன்
றனக்குப்பின்னடந்தான்வினைச்சவ்வியன்.

இ-ள். நீ விஸ்வாமித்திரனுக்குக கொடுக்கிறனென்று சொன்ன பொருளைக்கொடுத்தாய் சரியே; கூடவந்த எனக்குக் கூலி கொடுக்கிற பொருள் எங்கேயென்று கேட்க, உமக்கும்கொடுக்கிறேன் வாருமென்று சொல்லவே கொடுஞ் செய்கையை யுடைய சுக்கிரன் உத்தமனான அரசனுக்குப் பின்னே சென்றான். எ-று. (சச)

அன்னகாலையமைச்சனைநோக்கியே
யென்னைநீவிற்றிவற்குப்பொனீகெனச்
சொன்னபோதிற்றுணுக்கெனவேங்கியெம்
மன்னகேளெனமந்திரிகூறுவான்.

இ-ள். அந்தவேளையிலே மந்திரியைப்பார்த்துஎன்னைநீவிலைசெய்து இந்தச்சுக்கிரனுக்குக் கூலிப்பொருள் கொடென்று சொன்னபோதில் மந்திரி திடுக்கிட்டழுது எங்களரசனே! கேளுமென்று சொல்லுகிறான்

அன்னையாயெமதாண்டகையாகிய
நின்னையான்விலைகூறுதனீதியோ
வென்னைநீவிற்றிவர்க்குச்செலத்தரும்
பொன்னைநல்கெனவீழ்ந்தடிபூண்டனன்.

இ-ள். எனக்குத்தாயாய் அரசனுமானவும்மைநான்விலைகூறுகிறது நியாயமன்று; நீர்என்னைவிலைசெய்து இந்தப்பிராமணருக்குச்செலுத்தத்

தக்க பொருளைக் கொடுமென்று கீழேவிழுந்து வணங்கிப் பாதங்களைப் பிடித்துக்கொண்டான். எ-று. (௪௬)

மண்ணில்வீழ்ந்தவமைச்சனைமார்பணைத்
தொண்ணிலாவதனத்தொளிமாழ்கவே
கண்ணினீர்ப்புனலாட்டிக்கவுசிக
னெண்ணுரிமைக்குமேதற்குமதோவென்றான்.

இ-ள். அப்படி மண்ணிலே விழுந்துகிடக்கிற மந்திரியை அரசன் தன்மார்போடணைத்துக்கொண்டு அழகிதான சந்திரன்போன்ற முகத்தில் ஒளிமழுங்க தனது கண்ணினீராலே அவனை முழுகச்செய்து விசுவாமித்திரர் ஆலோசித்திருக்கிற சகுதிக்கு இது தக்கதாகுமோவென்றான். எ-று. (௪௭)

ஏற்குமோபொருட்குன்னைவிற்குவ
தார்க்குமாதவனெண்ணமறியலாந்
தார்க்குலாவுவெள்வேலவதாழ்க்கிலா
னூர்க்குளென்னைவிற்றெண்ணிதிநல்கென்றான்.

இ-ள். நான் கொடுக்கவேண்டிய பொருளுக்கு உன்னை விற்றுக் கொடுக்கிறது தக்கதாகுமோ? இனி எல்லோரும் அந்த விசுவாமித்திரருடைய நினைவெப்படியென் றறியப்படும் வெற்றிமாலை விளங்குவதான வெள்ளியவேலையுடைய அமைச்சனே! இனி நீ தாமதஞ்செய்யாமல் இந்தவூர்க்குள்ளே கொண்டுபோய் என்னை விலைசெய்து அழகிதான திரவியஞ் சுக்கிரனுக்குக் கொடுத்துவிடென்றானரசன். எ-று. (௪௮)

என்னபாவமெனக்குப்பலித்ததென்
றந்நகர்ப்பலவாவணவீதிவாய்ப்
பொன்னின்மாமுடிபீதிற்புற்சூடியே
மன்னனைவிலைமந்திரிகூறுவான.

இ-ள். இதென்னபாவம் எனக்கு லபிதமானதென்று அந்தவூரிலே பல கடைவீதிகளிலுஞ்சென்று அரசனது பொன்முடிசூடுகிற பெருமை பொருந்தின தலைமேலேயொரு புல்லைச்சூட்டி அரசனை மந்திரி விலைகூறுவானானான். எ-று. (௪௯)

ஆதிநூலினராயினுமல்லது
சாதியீனர்களாயினுஞ்சால்புடைக்
கோதிலான்றனைக்கொண்மினெனப்பல
வீதிதோறும்விலையதுகூறினான்.

இ-ள். வேதசாஸ்திரங்களுக்குரிய பிராமணராயிருந்தாலுஞ் சரிதான். ஜாதிசண்டாளரானாலுஞ் சரிதான். சான்றாண்மையையுடைய குற்றமில்லாத இந்த அரசனை வாங்கிக்கொள்ளுங்களென்று பலவாகிய வீதிகளெல்லாம் விலைசொல்லிக்கொண்டு திரிந்தான் மந்திரி. எ-று. ()

எரியுநலவிலையேதெனப்பொன்பதி
னாயிரம்மென்றமைச்சனியம்பினன்.

இ-ள். அப்படியானால் நல்லதென்று மந்திரியானவன் அவ்விடத்திலே வந்தவனாகிய வீரவாகுவைப்பார்த்து நான உனக்கு விலை செய்கிறேனென்று சொன்னான். அதற்கு வீரவாகு நான்கொடுக்கத் தகுதியான விலை யென்னவென்றுகேட்க, மந்திரி பதினாயிரம்பொன் கொடுக்கவேண்டுமென்று சொன்னான். எ-று. (ருரு)

தருகுவேனெனத்தன்பெயரால்பொறித்
தருளினன்புலையற்கமைச்சாவணம்
பொருளைவாங்கிப்புகழ்க்களித்தையபோய்
வருகவென்னமகிழ்ந்தவனேகினன்.

இ-ள். அப்படி ஆயிரம்பொன்னும் தருகிறேனென்று வீரவாகு சொல்ல, உடனே மந்திரியானவன் தன் பெயராலே விலைசீட்டெழுதி அந்தப்புலையனுக்குக் கொடுத்தான். அப்படிக் கொடுத்த பொருளை வாங்கிச் சுக்கிரனுக்குக்கொடுத்து, ஐயா சுக்கிராசாரியரே! போய்வாருமென்றுகூற, சுக்கிரன் சந்தோஷமாகச சென்றான். எ-று. (ருசு)

மீளிவேந்தும்விடக்கின்றசைச்சுமை
தோளிலேற்றிப்புலையற்றொடர்ந்தன
னாளிமொய்ம்பினமைச்சனுமன்னவன்
றாளில்வீழ்ந்துதளர்ந்துவருந்தினன்.

இ-ள். (அப்போதுடனே) வீரனான அரசன், தோலும் மாமிசமுமான காவடியைச சுமையைத தனது தோளிலே லேற்றிக்கொண்டு அந்தப் புலையனைத்தொடர்ந்து செல்லலானான். அப்போது சிங்கம் போலும் புஜபலத்தையுடைய மந்திரியானவன் அரசனுடைய காலிலே விழுந்து தளர்ச்சியுடனே வருந்தலானான். எ-று. (ருஎ)

கொற்றவாநின்குளிர்மலர்த்தாளிணை
யுற்றநாடொட்டுமுன்பணியேசெயப்
பெற்றமாதவப்பேறெனக்கின்றொடு
மற்றதேயென்றயலழுதேகினன்.

இ-ள். அரசனே! உம்முடைய குளிர்ந்த மலர்போன்ற பாதங்களிரண்டையும் நான் வந்தடைந்தநாள்முதல் உன்னுடைய ஊழியமே செய்யப்பெற்ற என்து பெரியதவப்பலன் இன்றோடே எனக்கு முடிவாகிப்போயிற்றோ (இல்லை) யென்று அரசன்கூடவே அழுதுகொண்டு புறமேபோனான். எ-று. (ருஅ)

வலையநீத்தபுயத்திடைவைத்தகா
வலையவேபின்றொடர்ந்தரிச்சந்திரன்
றொலைவிலாமுடைநாறியதொன்னெறிப்
புலையன்மேவும்புலக்குடிநண்ணினன்.

இ-ள். கேயூரங்களை நீக்கின தோளிலேயே வைத்த தோற்காவடி அசைய அசைய அவன் பின்னே அரிச்சந்திர மகாராசனைத் தொடர்ந்து நீங்குதலில்லாமல் புலால் நாறுகின்ற பழைய வழியிலே செல்லுகின்ற அந்தப் புலையனிருக்கிற புலைக்குடிலுக்குப் போனான். எ-று. (௫௯)

பார்த்தவர்க்குப் பயந்தசையாப்மறை
கோத்தகாவை யிறக்கிக்கொடுத்தபி
னூத்தைக்கொட்டிலினுள்ளிருந்தே நவி
காத்தகோவுடன் காலனியம்புவான்.

இ-ள். கண்ணாலே கண்டவர்களுக்குப் பயந்த தசையாகி வேதத்தையே கோத்திருக்கிற காவடியை இறக்கிக் கொடுத்த பின்பு, அழுக்கடைந்த கொட்டிலுக்குள் ளிருந்துகொண்டு உலகத்தையாண்ட அரசனுடன் காலனென்கிற வீரவாகு சொல்லுகிறான். எ-று. (௬௦)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தூங்கிருள்கடியுஞ்செந்தீ மூளையிற்சுடும்பிணத்துக்
கோங்கியபுலைப்பேறுடை யொன்றுண்டுபணங்காலுண்டு
வாங்கியிதெனக்குவைத்து வாய்க்கரிசியைநீயிட் டுண்
டாங்கிருவென்றுபின்னு மண்ணலுக்கவனுரைப்பான்.

இ-ள். தங்குகின்ற இருளைப் போக்குவதான சிவந்த நெருப்பு மூளுகிற சுடுகாட்டிலே தினஞ்சுடுவதாகிய பிணம் ஒன்றுக்கு உயர்வதான புலையன் பெறுவது வஸ்திரமொன்றுண்டு; காற்பணமுண்டு. இவற்றைத் தவறாமல் வாங்கிக்கொண்டு அவற்றை யெனக்காக வைத்துவிட்டு, வாய்க்கரிசியமாத்திரம் நீ வாங்கிக் கொடுத்துண்டுகொண்டு அங்கே தானே இருவென்று சொல்லிப் பின்னும் அரசனுக்கவன் சொல்லுகிறான். எ-று. (௬௧)

எனக்குநீபணமுங்கொள்ளியாடையுமளித்தல்கி
யுனக்குவாய்க்கரிசிதந்தே யுண்டிருபசியைநீக்கி
மனத்துளேவஞ்சமின்றிமயானத்திலுறைவாயென்னத்
தனக்குநேரில்லானானுநன்றெனச்சுடலைசார்ந்தான்.

இ-ள். எனக்கு நீ பிணஞ்சுடுகிற பணமும் கொள்ளிவஸ்திரமும் நன்றாகக் கொடுத்துவிட்ட பின்பு உனக்கு நான் கொடுத்ததாகிய வாய்க்கரிசியை மாத்திரம் நீ புசித்துப் பசியைத் தவிர்த்துக்கொண்டு உன் மனத்திலே எவ்வளவும் வஞ்சனையில்லாமல் அந்தச் சுடுகாட்டிலேதானே காத்துக்கொண்டிருக்கக் கடவையென்று சொல்ல, தனக்குச் சமானமில்லாத அரசன் அதற்கு நல்லதென்று சுடுகாட்டிற்குப் போனான். எ-று. (௬௨)

சுட்டவெம்பிணத்தோடொக்கத் தொலைந்துவெந்தெரிந்தகொள்ளிக்
கட்டையும்பாடைசேர்ந்தகழிகளுமெடுத்துக்கூட்டிக்

கொட்டிலொன்றெடுத்துமேனாள் கொடுஞ்சவங்கொணர்ந்துபோட்ட
கட்டிலொன்றேறிச்செங்கோற்காவலன்வீற்றிருந்தான்.

இ-ள். அங்கே சுடுகிறதான வெவ்விய பிணத்தோடேகூடச் சாம்பலாகவெந்து எரிந்துபோன கொள்ளிக்கட்டைகளாலும் பாடையோடு சேர்ந்துவந்த குறுக்குக்கழிகளாலும் சேர்க்கையாகக்கூட்டி ஒருகொட்டில் கட்டிக்கொண்டு முன்னே கொடிதான பிணத்தைத் தூக்கிக்கொண்டுவந்து போட்டுக்கிடக்கிற ஒருகட்டிலின்மேலேறி நீதியுள்ள அரசனிருந்தான். எ-று. (சுங)

பாடையிற்கொணர்ந்துவைத்தபிணந்தருபணமுங்கொள்ளி
யாடையும்வாங்கியிட்டியாண்டகைக்களித்தங்குற்றுக்
கூடையினிறைத்துநாளுங்கொடுத்தவாய்க்கரிசிவைத்தாங்
கோடைமாக்களிற்றினமன்னனுறைந்தனனுறைந்தபின்னர்.

இ-ள். பாடைமேலே கொண்டுவந்துவைத்த பிணத்தைச்சுடுகிற பணமும் கொள்ளிவஸ்திரமும் வாங்கிச்சேர்த்துத் தன் எஜமானுக்குக் கொடுத்துவிட்டு, அங்கேயிருந்த கூடையிலே தினந்தோறுங்கொடுக்கிற வாய்க்கரிசியை நிரப்பிவைத்துக்கொண்டு அப்படியாக முகபடாமணிந்த பெரிய யானைமேல்வருகிற அரசன் இருந்தான்; அவனப்படியிருந்த பின்பு எ-று. (சுச)

அத்திருநகரின்மற்றோரம்பலத்திரவுதங்கிச்
சத்தியகீர்த்தியென்பான்றங்களையனைத்தேடிப்
புத்தியில்வருத்தநாளணிப்புலைக்குடிலருகுதேடி
யுத்தமனீமங்காக்குமாறுகேட்டோடிச்சென்றான்.

இ-ள். அந்த அழகான பட்டணத்திலே அங்கொருமடத்திலே அன்றிராத்திரி சத்தியகீர்த்தி தங்கியிருந்து பின்பு தங்கள் எஜமானைத் தேடிக்கொண்டு தன்மனத்திலே வருத்தமுண்டாகவந்து அந்தப் புலைக்குடிசில்களினிடமெல்லாந் தேடிப்பார்த்து உத்தமனான அரிச்சந்திரன் சுடுகாடுகாக்கிறது தெரிந்து ஓடிவந்தான். எ-று. (சு௫)

நெருப்பெழுந்தெரியுஞ்செந்தீச்சுடுகரைநீந்தியேகி
மருப்பயிலலங்கன்மன்னைமந்திரித்தலைவன்மிச்
செருப்பயில்வீரவேலான்சிறுகுடிற்றனிலேபுக்கங்
கிருப்பதுகண்டான்காணுவேங்கியேயலறிவீழ்ந்தான்.

இ-ள். அங்கேநெருப்புமூண்டு எரிவதாகி, அந்தச் சிவந்த நெருப்பினாலே சுடுவதான சுடுகாட்டுக்கரையெல்லாங் கடந்துபோய் மணம்பொருந்தின மாலையணிகிற அரசனை முதல்மந்திரியான சத்தியகீர்த்திவந்துகூடி, யுத்தஞ்செய்கிற வீரவேலையுடைய அரசன் அங்கொரு சிறிய குடிசைக்குள்ளே புகுந்துகொண்டு அங்கேயிருக்கிறதைக் கண்டான்; கண்டவுடனே அழுதுயிரலாபித்துக் கீழேவிழுந்தான். எ-று. (சுசு)

மன்னவரிடம்பொருறுவந்துருழ்ந்துறைஞ்சிப்போற்ற
வன்னமென்னடையாராட வரம்பையர்பாடவைகும
பொன்னெடுங்கோயினீங்கிப்பூதருமாரிசாசுமாடு
மிக்நெடுங்கோயிலோவருதெய்தியதையென்றான்.

இ-ள். அரசர்கள் தங்களுக்கு இடமபோதாமல் வந்து மொய்த்து வணங்கித் துதிக்கவும, அன்னமபோலுமெலலிய நடையையுடையபெண்க ளாடவும், அரமபைகள் பாடவுமிருக்கிற பொன்மயமான நெடிய அரண் மனையைவிட்டுப் பூதங்களும் பசாசுகளுந கூடதாடுகின்ற இந்த நெடிய கோயிலோ சுவாமி! உமககுவநது லபிசமானது யென்றான். எ-று. ()

கதிதருமயனுமாலுங்கடக்கருங்கொடியபீரமை
விதியினையெளியநம்மால்வெல்லலாநதகைமைத்தாமோ
வதிகம்வந்தெய்தாமேழுளமைத்தவையடுக்குமல்லால்
மதிவலோயிதற்குவாடிவருந்தலேயென்றசொன்றான்.

இ-ள். மோடசத்தைத்தருகிற பிரமமாவும விஷ்ணுவும் கடத்தற் கரிதான கொடுஞ்செய்கையையுடைய விதியை எளிதான நம்மாலே வெல்லலாகிய தகுதியுள்ளதாமோ? முன்னுளிலே அமைததபடியே அமைவதாகும் அல்லாமல் வேறாக அப்படிப்பட்ட விதிக்கதிகமாக ஒன் றும் வந்துகூடாது. மதிவல்லவனான சததியகீர்த்தியே! இதற்காக நீ வாடிவருந்தாதேயென்று அரிச்சந்திரன் மந்திரிக்குச்சொன்னான். எ-று.

என்னவேயமைச்சன்றேறியிருந்தனனிருக்கவேந்தன்
முன்னமேயுய்த்துவைத்தவரிசியைமுறையினீந்தா
னின்னமுதருவதற்கென்றெண்ணியேயமைச்சன்வீழ்ந்து
பொன்னடிவணங்கிவாங்கிப்புல்லினிற்பொதிந்துகொண்டான்.

இ-ள். என்றுசொல்லுமளவில் மந்திரி தேறிக்கொண்டிருந்தான். அவனிருக்க, அரசன் முன்னே தான் சேர்த்துவைத்திருந்த வாய்க்கரிசி யினை அளவுப்படிகொடுத்தான். அதை இனியசோறு சமைத்தற்கென்று மந்திரிவிழுந்து அரசன் பொன்னடிகளை வணங்கிக்கொண்டு சிலபுல்லுக் கற்றைக்குள்ளே அந்த அரிசியை முடிந்துகொண்டான். (சுகூ)

மண்டலத்திறைவனுய்த்துவைத்தவாய்க்கரிசிதன்னைக்
கொண்டுபோய்ச்சுரபிக்கீந்துகோமயத்துடனேவீழ்ந்த
தண்டுலமெடுத்துக்குத்திச்சமைத்தினிதுதவவச்சோ
றுண்டவணுறைந்தார்பின்னையுற்றதுவாறெடுத்துரைப்பாம்.

இ-ள். பூமண்டலாதிபதியான அரசன் சேர்த்துக்கொடுத்த வாய்க் கரிசிகளைக் கொண்டுபோய் பசுவுக்குக்கொடுத்தது அது உண்டு அதன் சாணியிலேவிழுவதான அரிசியையெடுத்து குத்திச்சமைத்துப் பரிசுத்த மாக்கிக்கொடுக்க அந்தச்சோற்றை உண்டுகொண்டு அங்கிருந்தான்; பின்பு நடந்தசெய்கையை இனியெடுத்துச்சொல்லுவோம். எ-று. (எ0)

காசிகாண்டம் - முற்றிற்று.

ஆ விருத்தம் - கூ0எகூ.

---

பரமார்த்திகம்.

எட்டாவது,

# மயானகாண்டம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வல்லியுமகனுமந்தமறையவன்மனையிற்சேர்ந்து
சொல்லியபணிகளெல்லாஞ்சோர்வறச்செய்தபின்னு
மெல்லியோர்சாமமென்னவெழுந்திருந்தேவன்முற்றி
யல்லிருசாமஞ்சென்றாலளித்தகூழுண்டுறங்கி.

இ-ள். சந்திரவதியும் மகனும் அந்த விலைக்குவாங்கின பிராமணன் வீட்டிலேபோய், அந்தப்பிராமணன் சொன்னவேலைகளெல்லாம் குறைவில்லாமல் பொழுதளவுஞ்செய்து, மறுபடியும் அர்த்தராத்திரி விடிய ஒருசாமமிருக்கும்போதே விழித்தெழுந்திருந்து அவன் ஏவின வேலைகளெல்லா முடியச்செய்து பின்பு அந்தப்பகல் இரண்டுசாமமானால் அவனூற்றின கூழையுண்டு தூங்கி. எ-று. (க)

கையினிலுலக்கைபற்றிக்காந்தளினுதிரம்பாய
மெய்யினில்வெயர்நீர்சிந்தவிழியினிலருவிபாய
நெய்யினின்முடித்தகூந்தனெற்குத்துங்கொடுமைகாணு
மையினிற்றிகழ்வேற்கண்ணாரரம்பையர்மறுகிச்சோர்ந்தார்.

இ-ள். கையிலே உலக்கையைக்கொண்டு காந்தள்மலர்போன்ற அந்தக்கைகளிலே ரத்தங்கட்டிச் சிவப்பாகவும், உடம்பெல்லாம் வேர்வை நீரொழுகவும் கண்களிலே அருவிபோல் நீரொழுகவும், முன்னே சம்பங்கியெண்ணெயிட்டுச்சீவி முடித்தகூந்தலையுடைய சந்திரவதியானவள் நெல்லுக்குத்துகிற கொடுமையைக்கண்டு மையிட்டதுடனே விளங்குகின்ற வேல்போலுங் கண்களையுடையவர்களாகிய தெய்வரம்பைகளெல்லாரும் (இச்சந்திரவதிக்கு) இப்படிவரக் கூடுமோவென்று மயங்கிச் சோர்வதானார்கள். எ-று. (உ)

புன்கணுற்றரம்பைமாதர்வருந்தவுமபுந்திமேசயயா
வன்கணிரக்கமில்லான்மடித்தவாய்வெடித்தசொல்லான்
றன்கணன்பில்லான்பொல்லான்றறுகணன்விலைகொண்டாள்வோ
னின்கணில்லாதாள்பாரியிவனிலுங்கொடியபாவி.

இ-ள். தெய்வரம்பைகள் அப்படித் துன்பப்பட்டு வருத்தமடையவும், விலைக்குவாங்கி ஆளுகிறபிராமணன் அதை ஆலோசியாத கொடுஞ்செய்கையையுடையவனாய் கொஞ்சமேனு மிரக்கமில்லாதவனாய் மடித்த வாயுடனே அதிர்த்த சொல்லையுடையவனாய்த் தன்னிடத்திலெவ்வளவும்

அன்பில்லாதவனாய் அஞ்சாதவனாயிருந்தான் அந்த இனிதான முகதாக்ஷிண்ணியமில்லாத பிராமணனுடைய பெண்டாட்டியோ அவனைப் பார்க்கிலும் மிகவுங் கொடுமையான பாவியாயிருந்தாள் எ-று (௩)

அடியினாலஞ்சிமைந்தனந்தலைப்பயமுணர்த்த
விடியுமுன்னெழுந்திருந்துவிளைபுலங்களைப்பறித்துக்
கடிவனத்தடங்குசெய்யதாரோடமுஞ்சமிதையும்போன
முடிபுனைந்தலையில்வைத்துமுறைமுறைவருமந்நாளில்

இ-ள். அந்தப் பிராமணனடிக்கிற அடியினாலே புத்திரனான தேவதாசன் பயந்து, அப்பயமானது தூக்கத்தை விழித்தெழும்படிச்செய்ய விடிகிறதற்குமுன்னே எழுந்திருந்து அந்தப்பிராமணனுக்கு விளைகிற நிலத்திலுள்ள களைகளைப் பிடுங்கி அவனுடைய காவலுக்குள்ளான வனத்திலே அலைந்துதிரிந்து இலைக்கறிகள் பறித்துக்கொண்டு விறகும் சமித்துங்கட்டி பொறுக்கி டமண்யத்தக்க தலைமேலே வைத்துச் சுமந்து இப்படித்தினந்தோறும் வருவதாகிய அந்நாளிலே. எ-று. (௪)

மைந்தனுஞ்சிறாரோடேகிவனந்தனில்விறகுப ...
தந்திடுவழியினோர்பாற்றருப்பைகண்டிதுவிட்டேகி
லந்தணன்முனிவனென்றுவஞ்சியோர்வடத்தினீழ
லிந்தனமிறக்கியப்புல்லிருந்திடுந்தூறகட்சென்றான்.

இ-ள். ஒருநாள் அந்தப்புத்திரன் ஊரிலுள்ள பிள்ளைகளோடுகூடிச் சென்று காட்டிலே விறகுதேடிச் சுமைகட்டிச் சுமந்துகொண்டு வருகிற வழியிலே ஓரிடத்தில் தர்ப்பைப்புல் அதிகமாயிருக்கக்கண்டு இந்தத் தர்ப்பையைக்கண்டும் பறித்துக்கொண்டு போகாமற்போனால் பிராமணன் கோபஞ்செய்தடிப்பானென்று பயந்து ஒரு ஆலமரத்தினிழலிலே அந்த விறகுசுமையையிறக்கிவைத்துவிட்டு அந்தத் தர்ப்பைப்புல் முளைத்திருக்கிற தூறினிடமாகப் போனான் (௫)

பறித்தனன்குசையைப்பற்றிப்பறித்தலும்முனிவனேவக்
குறித்துவந்ததனுடங்குங்கோளராசசீறியோங்கித்
தெறித்தழல்விழியாற்சிந்தச்சீண்டிப்படத்தினடலோடும்
வெறித்தெழுந்தலறியோடிவெருவியேதரையில்வீழ்ந்தான்

இ-ள். அங்கேபோய்த் தர்ப்பையைப் பிடுங்கினான், அப்படித் தர்ப்பையைப்பிடித்துப் பறிக்கும்போது விசுவாமித்திரமுனிவ ரேவுதலினாலே கடிக்கவெண்ணி அந்தத் தர்ப்பைக்குள்ளடங்கியிருக்கிற பெரிய பாம்பானது சீறியெழுந்து நெருப்புப்பொறிதெறித்துக் கண்களினின்று முதிரக்கடித்தது, அப்படிக் கடித்தவுடனே மயங்கித் துள்ளி அலறிக் கொண்டோடிவந்து பயத்துடனே ஓரிடத்தில் வீழ்ந்தான். எ-று. (௬)

வடத்தின்கீழிருந்ததோழாமறுகிப்போய்வள்ளல்வீழ்ந்த
விடத்தினையஞ்சினையோவென்றுற்றுரையாயென்னட

படத்தினூற்பெரியநாகங்கடித்ததுபாருமென்று
விடத்தினாலறிவுசோர்ந்தான்விட்டுயிரடங்கிற்றன்றே.

இ-ள். அப்போது அந்த ஆலமரத்தினிழலிலே இளைப்பாறிக்கொண்டிருந்த தோழப்பிள்ளைகள் பயந்தோடிவந்து அந்தப்பிள்ளை விழுந்து கிடக்கிற இடத்தையடுத்து ஐயோ பிள்ளாய்!, உனக்கு என்ன துன்பம் வந்தது சொல்லென்றுகேட்க, படத்தையுடைய பெரியபாம்பு என்னைக் கடித்தது; நீங்கள் அதைப்பாருங்களென்று சொல்லிக்கொண்டே அந்தப்பாம்பு விடத்தினாலே புத்திமயங்கினான். உயிரும் அவனுடம்பை விட்டு நீங்கிச் சுவாசமும் அடங்குதலாயிற்று. எ-று. (எ)

ஆவிபோயகன்றபின்னையனைவரும்புரட்டிப்பார்த்துப்
பாவியுமென்னேயிந்தப்பாலகனிறந்தானென்று
மேவியவ்வடத்தின்கீழ்வந்தவரவர்விறகுகொண்டு
காவியங்கழனிசூழுங்காசியம்பதியிற்புக்கார்.

இ-ள். அப்படி உயிர்போய் இறந்தபின்பு எல்லாப்பிள்ளைகளும் அந்த உடம்பைப்புரட்டி அசைத்துப்பார்த்துப் பாவியான விதியினாலே என்ன ஆச்சரியம்! இந்தப்பிள்ளை இறந்துபோனானென்று திரும்பி அந்த ஆலமரத்தின் கீழேவந்து அவரவர்கள் கொண்டுவந்த விறகுசுமையை யெடுத்துக்கொண்டு நீலோற்பலங்கள் மலர்ந்துள்ள அழகிதான வயல் சூழ்ந்த காசிப்பட்டணத்துக் குள்ளேபோனார்கள். எ-று. (அ)

பாலர்வந்தூரிற்புக்கார்பானுவுங்கடலிற்புக்கான்
மாலைவந்திறுத்தபின்னர்வழியினைநோக்கியன்னை
பாலன்வந்திலனென்றேங்கிப்பரதவித்திருகண்டாரை
காலநொந்துருகிவாயிற்கடைத்தலைவந்துபார்த்தாள்.

இ-ள். அப்படி அந்தப்பிள்ளைகளெல்லாரும் ஊருக்குள்ளே வந்து சேர்ந்தார்கள். சூரியனும் மேலைக்கடலுக்குள்ளேபோய்ச்சேர்ந்தான். அப்படி ராத்திரிகாலமானபின்பு பிள்ளை வருகிறவழியைப் பார்த்துப்பார்த்துத் தாயான சந்திரவதி தன்பிள்ளை யின்னமும் வராதிருக்கிறானேயென்று தகைத்துப் பிரலாபித்துத் தனதிரண்டுகண்களிலு நீர்த்தாரை சிந்தும்படிநொந்துமனமுருகிக் கடைத்தலைவாயிலிலே வந்துபார்த்தாள்.

வணங்கியகரத்தாள்சால்வாடியமனத்தாண்மக்கா
ளிணங்கியும்முடனேவந்தவென்மகனெங்கேயென்றாள்
பணங்கமழ்குழலாயுன்றன்மைந்தனையரவுதீண்டி
யுணங்கியேயிறந்தானென்றுருப்பிர்த்திலண்மறுகிவீழ்ந்தாள்.

இ-ள். சோர்ந்த கைகளையுடையவளாய் மிகவும் வாடின மனத்தையுடையவளாகி வருகிற பிள்ளைகளைப்பார்த்து பிள்ளைகளே! உங்களுடனே கூடிவந்த என்மகனெங்கே! வரக்காணேனென்றாள். அதற்கு அந்தப்பிள்ளைகள் வாசனைபரிமளிக்கின்ற கூந்தலையுடைய அம்மே! உன்னுடைய புத்திரனைப் பாம்புகடித்து அதனாலேசோர்ந்து மடிந்துபோனு

னென்றுசொன்னார்கள். அதுகேட்டு மூச்சுமில்லாதவளாய் மயங்கிக் கீழேவிழுந்தாள் சந்திரவதி. எ-று. (௪௦)

மடத்தகைவல்லிபின்னுமைந்தரைநோக்கியெந்த
விடத்திலேயிறந்தானென்னயாம்வருவழியினிற்கும்
வடத்தினுக்கயலேசற்றேவடக்கினிற்குசைபடர்ந்த
திடத்தினிற்றெற்கேயென்றுசாற்றியேயவர்கள்போனார்.

இ-ள். அப்படி மயங்கிவிழுந்து பின்னும் அந்த யௌவனத்தகுதி யையுடைய சந்திரவதியானவள் அந்தப் பிள்ளைகளைப்பார்த்து பிள்ளைகளே! என்பிள்ளை எந்தவிடத்திலே இறந்துகிடக்கிறுனென்றுகேட்கப் பிள்ளைகள் நாங்கள் வருகிறவழியிலே நிற்கின்ற ஆலமரத்திற்குப் பக்கத்தே கொஞ்சம் வடக்குத்திசையிலே தர்ப்பைபடர்ந்த மூளைத்திருக்கிற மேட்டுக்குத் தென்புறத்திலே இறந்துகிடக்கிறுனென்றுசொல்லி அந்தப்பிள்ளைகள் போய்விட்டார்கள். எ-று. (௪௧)

அறுதியீதென்றுசாலவறிவழிந்துருகிவீழ்ந்து
மறுகினுணடையோர்க்கஞ்சிவாய்திறந்தரற்றுணாமற்பின்
சிறுதொழின்முழுதுஞ்செய்துதீர்ந்தபின்றேடிமேற்
றுறுதியென்றுளத்தினுள்ளேயொடுக்கியுந்தகத்திற்புக்காள்

இ-ள். முடிவு இப்படியாயிற்றென்று மிகவும்புத்திமயங்கி மனமுருகிக் கீழேவிழுந்து மயக்கினவளாகித் தன்னைவிலைக்குவாங்கின பிராமணனுக்கும் பிராமணத்திக்கும்பயந்து வாயைத்திறந்து கூவியழாதவளாய்ப் பின்னுஞ்சோர்வுடனே தான்செய்வதான சிறிய பணிவிடைகள் முழுதுஞ்செய்து முடிந்தபின்பு இறந்துகிடக்கிறபிள்ளையைத்தேடிக்கொண்டு போகிறதே இனித்தகுந்த காரியமென்று தன்மனத்துக்குள்ளே அப்படிப்பட்ட துன்பத்தை ஒடுக்கிக்கொண்டுவந்து வீட்டுக்குள்ளே போயினள். எ-று. (௪௨)

முறைமுறைபணிகளெல்லாஞ்செய்துமுடிந்தபின்னர்
மறையவன்றன்னையேத்திவாய்புதைத்தழுதிம்மி
யிறைவகேளரவந்தீண்டியென்மகனிறந்தான்யானா
ரிறையிலேசேறற்குன்றன்றிருவுளமறியேனென்றாள்.

இ-ள். அப்படி வீட்டுக்குள்ளேவந்து கிரமகிரமமாகத்தான்செய்வதான ஊழியங்களெல்லாஞ்செய்து முடியமுடித்துப் பின்பு அந்தப்பிராமணனைத் தோத்திரஞ்செய்து வாயை ஒருகையால் மூடிக்கொண்டு அழுது விக்கித்து சுவாமி எஜமானே! கேட்பீராக: என்பிள்ளை பாம்பு கடித்திறந்துபோனான்; ஆகையாலினினான் அந்த இடத்துக்குப்போக உம்முடைய திருவுள்ளமெப்படியோ தெரிகிலேன் சொல்லுமென்றாள் சந்திரவதி. எ-று. (௪௩)

சினக்கடுஞ்சொல்லாற்சீறித்திடுக்கிடவுரப்பிவீணி
யெனக்குழுகுற்றமெய்யன்றியென்பொருட்கழிவுவந்தா

னுனக்குறுகுறைதானுண்டோவுறவிலைப்பட்டபையல்
றனக்கொருதாயுமுண்டோதவிர்கநீபோவதென்றான்.

இ-ள். அதுகேட்டு கோபங்கொண்ட கடுஞ்சொற்களுடனேசீறி சந்திரவதி திடுக்கிடும்படி அதட்டி அட பயன்படாதவனே! என்பொருளுக்குக் கேடுநேரிட்டால் எனக்கு மிகுந்த குறைவேயல்லது உனக்கு வருவதான குறைவு ஏதேனுமுண்டோ? எனக்காக விலையான அந்தப் பையனுக்கு ஒரு தாயானவளுமுண்டோ? (இல்லை.) நீ போகவேண்டாமென்று சொன்னான். எ-று. (கச)

அடிமைபட்டேனெனினுமையாவந்தரந்திறந்தானென்றாற்
கொடியனேன்றனக்குப்பெற்றவயிறுதான்கொதித்திடாதோ
ரடியின்மேலிறந்தான்றன்னைப்பார்த்தெடுத்தடக்கிக்கங்குல்
விடியுமுன்வருவேனல்குவிடையெனத்தொழுதுவீழ்ந்தாள்.

இ-ள். (அதற்கு) ஐயரே! உமக்கு அடிமைதான் ஆனாலும் என்கண்காணாத வனாந்தரத்திலே அந்தப்பையனிறந்துபோனானென்று சொல்லக்கேட்டால் பாவியான யெனக்குப் பெற்றவயிறுதான் கொதிப்புக் கொள்ளாதா? ஆகையால் எங்கோ ஓரிடத்திலே இறந்துகிடக்கிறவனைத் தேடிக் கண்டுபிடித்து எடுத்தடக்கஞ்செய்து பின்பு இந்தராத்திரி விடிவதற்குமுன்னே வந்துவிடுகிறேன்; நீர் தயவுசெய்து உத்தரவுகொடுத்தருளுமென்று வணங்கிக் கீழேவிழுந்தழுதாள். எ-று. (கரு)

மாலையங்குழலாள் கூறமறையவன்மனம்பொருந்தி
வேலைகண்மிகவுமுண்டுவிடியுமுன்வருவாயாகி
னீலவேல்விழியாயேகுநீயெனவொருகாற்சொன்ன
காலையேயெழுந்திருந்துகடிநகர்கடந்துபோனாள்.

இ-ள். பூமாலையணிந் தழகுகொண்ட கூந்தலையுடைய சந்திரவதி இவ்வாறுசொல்ல, அந்தப்பிராமணன் மனஞ்சம்மதித்து நீலமலர்போலவும் வேல்போலவுங் கண்களையுடையவளே! நாளைத்தினம் என்வீட்டிலே அதிகமாக வேலைகளிருக்கின்றன; அவைகளெல்லாஞ் செய்வதற்காக நீ விடிகிறதற்கு முன்னே வருவாயேயானால் போவென்றொருதரஞ் சொன்ன அப்பொழுதே யெழுந்திருந்து அந்தக்காவல்கொண்ட பட்டணத்தைக் கடந்துபோனாள். எ-று. (கசு)

பாவியேன்மகனேயென்பள்பதைப்பள்மென்முகத்தின்மோதித்
தாவியேவிழுவணின்றுதயங்கியேமயங்கிவீழ்வாள்
காவியங்கண்ணீர்பாயக்கதறுவள்பதறியேங்கி
யாவியைத்தேடித்தேடியலமருமுடலமொத்தாள்.

இ-ள். பாவியான யெனதுபுதல்வனே யென்று கூவுவாள்; போகும்போதே பதைபதைத்துக் கீழேவிழுவாள்; மிருதுவான தன்முகத்திலே அடித்துக்கொண்டுதாவிப்போய் அப்புறத்தே விழுவாள்; அங்கேகிடந்து

றனியேகிடந்துவிட நோய்செறிந்துதரைமீதுருண்டமகனே
யினியாரைநம்பியுயிர்வாழ்வமென்றனிறையோனும்யானுமவமே.

இ-ள் (மகனே!) பனியினாலே உன்னுடம்பு நனைதலாகியும், பின்பு வெயிலினாலே காய்தலாகியும், பசியினாலே வருந்துதலாகியும் நீ சாவாமல் (யாவரையுங் கடிப்பதான) அரியசெய்கையையுடைய வெவ்விய சணகளோடுகூடின ஒருபாம்பினாலே நீ யிறந்துபோகலான அதிகபாவம் யாதுசெய்தாயோ நான் தெரிகிலேன். இங்கே நீ ஒருவனாகக் கிடந்து விடமாகிய வியாதிபிடித்து மண்மேற் புரண்டுகிடக்கிற புத்திரனே! இனி யாரைவேண்டி உயிர்வாழக்கடவோம்? எனது தலைவனும் நானும் உயிர்வாழ்தல் வீணான காரியமே. எ-று. (உக)

நிறையோசைபெற்றபறையோசையற்றுநிரையாய்நிறைந்தகழுகின்
சிறையோசையுற்றசெடியூடிறக்கவிதியாரிழைத்தசெயலோ
மறையோனிரக்கவளநாடனைத்துமவழுவாதளித்தவடிவே
லிறையோனளித்தமகனேயுனக்குமிதுவோவிதித்தவிதியே.

இ-ள் நிறைந்த ஒலியைக்கொண்ட வாத்தியங்களின் முழக்கங்களில்லாமல் வரிசையாய் நிறைந்திருக்கிற கழுகுகளினுடைய சிறகடித்துக்கொள்ளுகிற சத்தத்தினைக்கொண்ட செடிகளுக்குள்ளே நீ யிறந்துபோகப் பிரமதேவரானவர்செய்த செய்கைதானோ? ஒரு பிராமணன் யாசிக்கத் தனது வளப்பங்கொண்ட நாடுமுழுதுங் கொடுத்த கூரிய வேலாயுதத்தையுடைய அரசன்பெற்ற புத்திரனே! உனக்குங்கூட இப்படித்தானோ விதிதமான விதி வாய்த்தது. எ-று. (உஉ)

வானின்றிழிந்துசொரிகின்றதாரைமழைபோலவீழ்விழிநீ
ரூனின்றிமேனியுதிரங்கள்சிந்தவுயிரின்றிவெம்புதழலின்
மேனின்றுவெந்ததளிர்போல்மயங்கிவிதியாரைநொந்துதனியே
யானின்றிரங்கவேனென்பதில்லையிதுவோவுனீதிமகனே.

இ-ள். எனதுபுத்திரனே! ஆகாயத்திலிருந்திறங்கிப் பொழிகின்ற மழைத்தாரையைப்போற் கண்ணீரொழுகவும், என்னுடம்பிலே மாமிசமென்பதில்லாமல் ரத்தங்களொழுகவும், பிராணபலமுமில்லாமல் வெப்பமாகிய நெருப்பின்மேலேவிழுந்து வெந்த தளிரைப்போல் வாடிப் பிரமதேவனை நொந்துகொள்ளுகிறதாய் நான் ஒருத்தியாகநின்று பிரலாபிக்க என்பிரலாபிக்கிறதை ஏனென்பதில்லாமல் நீ கிடக்கிறதான இதுதானோ உனக்கு நியாயமாக முடிந்தது. எ-று. (உங)

செங்கோலறத்தின் முறையேசெலுத்து திறலோனெவர்க்கு
முரவோன், வெங்கோபயானை விறன்மன்னனம்மை விடுவிக்கவெண்
ணிவருநாள், பங்கேருகத்து மலர்போல்விளங்கு வதனமகிழ்ந்தபரி
வா, லெங்கேயெனதை மகனென்றுரைக்கி லெதிரேதுசொல்வன்
மகனே.

இ-ள். தாமரை மலர்போலு முகத்தையுடைய மகனே! தருமமார்க்கப்படியே செங்கோல் செலுத்துகின்ற சார்த்தியனாகியும் எப்படிப்பட்டவர்களுக்கும் அறிவாற் சிறந்தவனாகியும் வெவ்விய கோபத்தைக் கொண்ட யானையையுடைய வெற்றியானமிக்க நந்தராசனை நமிருவரையும் (தான் வாங்கின பொருளைக்கொடுத்து) மீட்டுக்கொள்ள வரும்போது தான் மீட்கவந்த சந்தோஷத்தினாலே என்னுடைய பிரியமுள்ள புத்திரனெங்கேயென என்னைக்கேட்டால் அப்போது யான் மறுமொழி யாது சொல்லக்கடவேன்' எ-று. (உ௪)

*நீராளவாவிசெறிநாடனைத்துநிறைமாதவற்குதவினும*
*பாராளுநீர்மைகெடாப்பறந்தலையடியாளுமெந்தைபுயவில*
*காராளரேர்கள்கடவோசையோய்விலகன்னோசிநாடதனைமே*
*லாராளவல்லரவமேவனந்தில்ரவாலிறந்தமகனே.*

இ-ள். ஐயையோ! வீரனே இந்தக்காட்டிலே ஒருபாம்பினாலே யிறந்துபோன குமாரா! நீர் நிரம்பக் குளங்கள் நெருங்கின கோசலநாடு முழுதும் நிறைவான பெரிய தவமுனிவனுக்குக் கொடுத்துவிட்டாலும், உலகத்தை ஆளுவதான சம்பத்துத்தன்மை உனக்கில்லாமற் போனதல்ல. உன்பிதாவைப்போலவே ஒருநாட்டையாளுகிற என்பிதா காலமுடிவு பெற்றால், வேளாளர்கள் ஏர்களை ஓட்டுகிற ஓசை ஓயாதிருந்துள்ள கன்னோசிநாட்டைப் பின்பு நீயல்லது இனியார் ஆளவார்கள்' எ-று. ()

*நல்லோர்வகுத்தமுறையாமறங்களிலெட்டிலொன்றுகுறையே*
*மில்லோரையற்பமிகழ்ந்திலோமிறுக்குமிறையன்றியேறவுநவேறு*
*சொல்லோமறுத்துமுரையோமுறைகடந்துறவோர்கள்புத்திகடவே*
*மெல்லோர்தமக்குமினிதேவிளைப்பமேதாகவந்ததிதுவே.*

இ-ள். நன்னூலுணர்ந்த பெரியோர்கள் சொன்ன தருமங்கள் முப்பத்திரண்டிலே, ஒருதருமமாயினுங் குறையாதுசெய்தோம். எளியவர்களைக் கொஞ்சமேனு மிகழ்ச்சிசெய்திலோம். (நாங்க ளரசராகையால்) கொடுத்த தீர்ப்பான பகுதிப்பொருளான ஆறிலொருபங்கையல்லது அதிகமாக விரும்பினோமல்லோம். பொய்சொல்லியறியோம். கேட்டவர்களுக்கு இல்லையென்று மறுத்துச்சொல்லிலோம். துறவறத்தார்கள் சொன்னபுத்தியைக் கடந்துசென்றிலோம். யாவருக்கும் நன்மையையே செய்துவந்தோம். இப்படியிருக்கச்செய்தே எந்தக்காரணத்தினாலே யெங்கள்பிள்ளை இப்படிப் பாம்புகடித்துச் சாகலாயின? எ-று.

*மறைநீதியுற்றபுறநாடழித்துவருசேனையாள்வதறியே*
*மறைநீதிமுற்றுமுணராவமைச்சையணிவாயில்வைத்துமறையேங*
*குறையேயிழைத்துவினையேவிளைத்தகுடிவைத்திருந்துமறியே*
*மிறையேதவத்தின்விளைவேயெமக்குவிதுவோவிதித்தவிதியே.*

இ-ள். வேதநீதிப்படியே நடக்கிற அந்நியர்நாட்டைக்கெடுத்து அங்கிருந்துவந்து கூடினவர்ன சேனைகளை ஆளுஞ்செய்கையைத் தெரி

தோமல்லோம். பெரியோர்கள்சொன்ன நீதிமுழுதுந்தெரியாத மந்திரியை யெங்களழகிதான அரண்மனைவாயிலிலே வைத்தாளவுந் தெரிந்திலோம். குறைவானவைகளையேசெய்த பாவச்செய்கைகளையே மென்மேலும் வளர்க்கிற குடிகளை எங்கள் நாட்டிலே குடிவைக்கவுந் தெரிந்திலோம். (இப்படிக்கிருக்கச்செய்தே) எங்களுக்கு ஓ ஓ தெய்வமே! எங்கள் தவப்பயனே! நீங்கள் அமைத்த அமைப்பு இப்படி பாம்புகடித் திறப்பதோ சொல்வீர்கள். எ-று. (உஎ)

கனமுந்தருக்கள்குலமுந்தரித்தகரமும்பெருத்தவரமூர்
த்தனமுஞ்சிறந்தமுகமுந்தரித்தசிகையுங்கிடக்குமுறைகண்
டினமுந்தரித்தவுயிரானபாவியிறவாமலென்றன்மகனே
மனமுந்தரிப்பதிலைநொந்துபெற்றவயிறுந்தரிப்பதிலையே.

இ-ள். (கைம்மாறு வேண்டாதுகொடுக்கிற) மேகச்செய்கையையும், கற்பகமுதலான தெய்வவிருக்ஷங்களினுடைய செய்கையையுங்கொண்ட கையும், பெரிதான சாமர்த்தியமும், எப்போதும் சிறந்துள்ளமுகமும், தலையிலேகொண்ட குடுமியும், மணமேற்கிடக்கிற வகைகளைக்கண்டும் இன்னமும் என்னுயிரானபாவி சாகாமலிருக்கிறதாயிற்று. என்மகனே! நீயிறந்ததாலான துன்பத்தை இனியென்மனமும் தாங்குகிறதாயில்லை. வருந்திப்பெற்ற என்வயிறுந் தாங்குகிறதாயில்லை. எ-று. (உஅ)

பரவாதிகட்குமிகவேவிளைத்தபடிபோலுளத்திலறமே
விரவாததுட்டமுனிகௌசிகற்குவினையேயிழைத்தகுறைபோற்
கரவேபிடித்துவறியேனளித்தகனிருவிசெற்றகடுவா
யரவேயுனக்குமுனதோபகைக்கவறியேனிழைத்தவினையே.

இ-ள். ஒருசமயவாதிகள் மற்றொருசமயவாதிகளுக்கு மிகவும் இடர் செய்கிறதுபோல், எங்கள்விஷயமாகத் தமது சிந்தையிலே தருமகுணங்களை யெவ்வளவுங்கொள்ளாத கொடுஞ் செய்கையையுடைய கௌசிக முனிவருக்கு நாங்கள்பண்ணின குறைவைப்போல, எளியவளான நான் பெற்ற இளையானைபோன்ற புத்திரனுயிரை மறைந்திருந்துவந்து போக்கின விஷவாயையுடைய பாம்பே! இப்படிவிரோதஞ்செய்வதான உனக்கும் பிறரால் ஐயோவென்றிரங்கத்தக்க நான்செய்த குறைவுண்டோ?

என்னாயகன்றன்மணிமார்பிலேவிளையாடுகின்றவெழிலோய்
முன்னாய்விளைந்தகனன்மூழ்கவெம்மின்முதலேநடந்தமயலாய்
செந்நாய்திரண்டுசெறிகானிருந்துதெளியாதிரங்குமெனைநீ
யன்னாய்வருந்தலையெனாதநின்றனறிவுக்கடாதுமகனே.

இ-ள். என்நாயகனுடைய அழகிதானமார்பிலே விளையாடத்தக்க செல்வக்குமார! முன்னே மூண்டநெருப்பிலே எங்களுக்குமுன்னேபோய் விழப்போன குழந்தாய! செந்நாய்கள்கூடி நெருங்கின இந்தக்காட்டிலே யிருந்து மனந்தெரியாம லழுகின்ற என்னைப்பார்த்துத் தாயே வருந்தி

கோபமுள்ளவர்கள். விடிவதற்குமுன்னே நான் அங்குப்போகாதிருந்தால் அதிகதண்டனை செய்வார்கள். ஆகையால் இந்தப்பிள்ளையை விரைவிலே போய்த் தகனஞ்செய்வித்துப் பின்பு போகக்கடவேனென்று தனது புத்திரனையெடுத்து அழகான தோளின்மேலே சாய்த்துக் கொண்டு (திருக்குமாரனைத் தூக்கமாட்டாமல் தடுமாறித்) தளர்ந்தவளாகச் சந்திரதயராஜனுடைய குமாரியான சந்திரவதியானவளமையானநோக்கிச் சென்றாள். எ-று. (கூ௧)

காடுமேடுநின்றுசெறிந்தசெந்நாய்முன்னே
கொத்திபிழுத்திடப்பறந்துவருகழுகுமோதப்
போடுபோடென்பலபேய்தொடரக்கொண்டு
போகேலெனக்கொடியபூதஞ்சூழ
பாடெல்லாம்பறிக்கநரிகளாவ
வார்குழலுஞ்சோர்துகிலுமவனந்தொடக்க
விடுபாடித்தனையும்பட்டுநீண்முள்
விடுகாடுகடந்துநெடுஞ்சுடுகாடுற்றாள்.

இ-ள். காட்டிலும் மேட்டிலுந் திரண்டுநிற்கின்ற செந்நாய்களுக்கு முன்னே வாயாற்குத்தியிழுப்பதற்காகப்பறந்துவந்துகழுகுகள்மோதவும், நீ போட்டுவிடு, போட்டுவிடென்றுபலவிதமானபசாசுகள்தொடரவும் நீ கொண்டு போகாதேயென்று கொடுமையான பூதங்கள் சூழவும், பக்கங்களெல்லாம் வந்து பிள்ளையைப் பிடுங்கிக்கொண்டு போகுதற்கு நரிகள் தாண்டி விழவும், நீண்ட கூந்தலையும், அவிழ்ந்து தொங்குகிற வஸ்திரத்தையும் காட்டிலுள்ள முள்ளுகளும் மரங்களும் சிக்கியிழுக்கவும் இப்படித் தடைபடுகிற இவ்வளவும்பட்டு நீண்டமுட்கள் தைப்பதான காடுமுழுதுங்கடந்து நெடிதான சுடுகாட்டைப்போய்ச்சேர்ந்தாள். எ-று.

பிணங்கள்சுடுங்கடும்புலையரரவத்தாலும்
பிணந்தலைவெடித்திடுபேரொலியாலும்
நிணங்கருகிச்சுறுநாறுமுடையினாலு
நெடுங்கனலின்கொழுந்தெழுந்தநிவப்பினாலுங்
கணங்கள்மிகக்களித்தாடுந்துழனியாலுங்
கனற்பொறியின்மலிவாலும்புகையினாலுஞ்
சுணங்குபலபிணங்குபெருங்குரைப்பினாலுந்
தோகையறிந்துணர்ந்துகொடுஞ்சுடலைசார்ந்தாள்.

இ-ள். அங்கே பிணங்களைச் சுடுகிற கடுமையான பறையர்களுடைய சத்தத்தினாலும், அந்தப் பிணங்களின் தலைகள் பிளந்து வெடிக்கிற பெரியதான சத்தத்தினாலும், பிணங்களினுடைய கொழுப்புகள் கருகிச் சுறுசுறுவென்று நாறுகிற புலால்நாற்றத்தினாலும், நீண்டநெருப்பின் கொழுந்து கிளருகிற உயர்ச்சியினாலும், பூதமுதலான கூட்டங்கள் மிகவுஞ் சந்தோஷித்துக் கூத்தாடுகிற சத்தத்தினாலும், நெருப்புப்

உனக்குத்தக்கதோவென்று தன்பிள்ளையைக்காலாலே தாக்கித்தூரத்தே யெறிந்தான். எ-று. (கஎ)

திந்தி யுரபிரேங்கமேவங்கிவெளி
யிருவிபூந்தாற்பாடிமிசைமேயபடிசாய்ந்தாட
மறிந் தவிழுடரர்போயிசென்றடி மேல்விழுந்
தொழுதுருகியிதிரி பருவிசொரியவல்லி
யறிந்தறிலனில்புரில்வழங்குநீதி
யருவினைமேபதருகியுறவுப்பாவி
மறிந்தமகன்றனைச் சுட நான்வந்தேனையா
வறிமேயற்பொருளுளதோ வழங்கவென்றாள்.

இ-ள். அப்படியெறிந்தவுடனே சந்திரமதியானவள் உயிர்சோர்வதாக அழுது, கோடையிடிவிழுந்து அதனுடனேபூமியிலே அடிவேரற்று அசைந்தலாகி முறிந்துவிழுகிற மரத்தைப்போற்போய் அவன் கால்மேல்விழுந்து வார்த்தைகள் குழறுதலாய் கண்களிலே அருவிபோல் நீரொழுக ஐயா! இந்த வூரிலே வழங்குவதான நியாயக் கிரமத்தை எவ்வளவும் நான் தெரிந்தேனல்லேன். தீராதபாவஞ்செய்துள்ள நானோ ஆருமற்றவள். மிகவும்பாவி. இறந்துபோன என்பிள்ளையைச் சுடுதற்கு நானொருத்தியாகவே வந்தேன். ஆதலால், ஐயனே! எளியவளான உமக்குக்கொடுக்க என்னிடத்திலே எப்படிப்பொருளுண்டாயிருக்கும் என்று சொன்னாள்.

பொருளுடையேன் றமருடையே னுனலிந்தப்
புத்திரனைத் தோண்மீது வைத்துப் போந்திவ்
விருளிடையிற் சுடலையில்வந் தெய்துவேனோ
வெறிந்தருநறைக் கட்டை யினி லேற்றுவேனோ
தெருளுடையா யறமுடையாய் வினையேனீன்ற
சிறுவனையான் சுடக்கருணை செய்வாய்தேயா
வருளுடையா யாதார மற்றேற்குன்ற
னடியிணையே தஞ்சமென வலறிவீழ்ந்தாள்.

இ-ள். பொருளுள்ளவளாய் உறவினரையுமுடையவளானால் நான் இந்தப்பிள்ளையை என்தோளின்மேலேசார்த்தித் தூக்கிக்கொண்டுவந்து இந்த இருட்டிலே சுடுகாடு வந்துசேருவேனோ? இன்னமும் எரிந்துவிழுந்து கிடக்கிற குறைக்கொள்ளிக்கட்டைகளை அடுக்கி அதன்மேல் பிள்ளையை வைப்பேனோ? இதெல்லாந் தெளிந்துகொண்டவரே! தருமந்தெரிந்தவரே! பாவியான நான் பெற்றபிள்ளையைத்தகனஞ்செயவதாகநீர்கிருபை செய்யவேணும். குறையாத இரக்கமுள்ளவரே! யாதொரு ஆதாரமுமில்லாதஎனக்குஉம்முடையபாதங்களிரண்டுமேஆதாரமென்றுசொல்லி அரசன்கால்மேலே அலறிக்கொண்டு போய்விழுந்தாள். எ-று. (கஅ)

பொன்னனையாய் விடுவிடுயான் புலையனென்னிற்
லையனுமல் லேன்புலையற் கடிமைகண்டீர்

மில்லையென சொல்லுவ து சற்றுமேலா
நிந்தனையெனக் கொலியன் நிமம்பமேவா ர்
பல்லுறுப நிலவாரிறு ப மான்போற்
பதைபதைத்துப் பைந்தொடியாள் பதறிவீழ்ந்தாள்.

(இ-ள். நீ சாலவலவளே நல்லவளே மிகவுஞ் சமர்த்துள்ளவள் நீயே! நான் பார்த்தேன்! நல்ல கற்பினையுடைய பெண்கள் எல்லாரிலும் இந்திரசால வித்தையில் வல்லவளா யிருக்கிறுயென்று (புகழ்வதுபோ லிகழ்ந்து) நீ அக்கினி விரதங்கள் கூட திருடியேகொணவந்திருக்கிறாய். சிவந்த பொனைறுற செய்த திருமங்கிலியம கயிற்றுடனே உனகழுத்தி லிருக்கசெயதே ஒன்று மில்லையென்று சொல்லுகிறது சிறிதும் பொருநதாது. இதை சதாலியையாள சருகைகொடுக்கவேணடியபொருளாகக் கொடுவென்று சொல்லவே, வேடர்களுடைய அம்புகள்மிக்க குறிச்சி களசவிலே அகப்பட்ட மானைப்போல் துடிதுடித்து சசந்திரமதியானவள் பதறிவிழுந்தாள். எ-று. (சஉ)

## கலி விருத்தம்.

வாடினு ளாரந்தாண்மலர்மாமுகங்
கோடினு ளருந்தினா ணகொடுங்
கேடினு ளைந்ததென்றுகிலேசமெய்
மூடினு ளவிழுசசெறிந்தாளரோ.

இ-ள். உடம்பெல்லாம வாடினுள்; தளர்ச்சியாயினுள்; தாமரை மலர்போலும் பெருமைபொருநதிய தனது முகம் கோணுதலானுள்; பயந்தாள; வருந்தினுள; கொடிதான கெடுதல்ப்போதுக்கு சேர்ந்த தென்று துன்பத்தையே உடம்புமுமப மூடுதலானுள்; பெருமூசசும் விட்டாள். எ-று. (சங)

அலைவிலாவரிச்சந்திரன்கவல் நு
நிலைவில்பாவமுக்கும்நோற்றருமங்கலம்
புலையன்கானவும்போய் மதாவெனு
வலையின்மீதுமெழுகொத்தருகினாள்.

இ-ள். எக்காலத்தும வருநதுதல் கொள்ளாத அரிச்சந்திரமகாராஜ னுக்கேயல்லாமல் வருந்துதலையுடைய எல்லாருக்கும் காணப்படாத எனது திருமங்கிலியமானது ஒருபறையன் காணவு மாயிற்றேயென்று கொல்ல னுலையின்மேலிட்ட மெழுகையொப்பா யுருகினுள். எ-று. (சச)

இருளருங்குணத்தெந்தைக்குநல்வர
மருளுங்காலத்தரவணிவேணியான்
திருவுருஞ்செய்த திவ்வியமென்மொழிப்
பொருளுமிக்கலம்புக்கதின்பொய்த்ததோ.

இ-ள் அஞ்ஞானநீங்கின குணத்தையுடைய எனது தந்தைக்கு நல்லவரத்தைக் கொடுக்கிற காலத்திலே பாம்பையணிந்த சடையை

அன்னையின்றியருங்கானிலெய்திய
வன்னைபோயு பரவங்கடித்தலின்
பின்னையும் முனையுமவிற்றவெவ்விலை
யென்னையெவ்வணநொந்தனையேந்தலே.

இ-ள். ஓ புத்திரா! உனது தாய உன்கூடவராமல் அரிதான காட்டுக்குள்ளேபோன உன்னை ஓடிவந்து பாம்புகடித்ததனாலே அப்போது உன் தாயையும் உன்னையும் ஒருவருக்கு விலையாகவிற்ற என்னை எவ்விதமாக எண்ணி நொந்துகொண்டாய். எ-று. (௫0)

நந்தநாடுநலமுமிழந்தும
யெந்தமோடுவந்திவ்வணம்பட்டனை
மைந்தனேயென்றனும்பெற்றவாழ்வுனக்
கிந்தவாழ்வளவோவென்றிரங்கினான்.

இ-ள். ஓ மகனே! நம்முடைய நாட்டையும் நம்முடைய சுகத்தையும் விட்டு நீயும் எங்களுடனே கூடவந்து இவ்விதமானாய்; என்றாலே நீ பெற்றசுகம் உனக்கு இந்தசுகத்தளவதானோவென்றழுதான். எ-று.

ஒன்றிலாதவுயிரினையோம்பியே
பொன்றிலாதபுலையனுக்காட்பட்டான்
வென்றிவேந்தினிமீட்கத்தருவனோ
வென்றிறந்தனையோவென்றியம்பினான்.

இ-ள். நிலைபேறில்லாத உயிரை வளர்த்துக்கொண்டு சாவமாட்டாமல் ஒருபறையனுக்கடிமையானான்; அப்படி அடிமையான ஜயத்தையுடைய அரசன் இனி நம்மை மீட்டுக்கொள்ளமாட்டுவானோ மாட்டானென்றெண்ணித்தானோ நீ இறந்துபோனாயென்று சொன்னான். எ-று.

விற்றநாளிலென்மேனிதழுவியநிற்
பற்றியந்தணனீர்த்துப்பார்த்திருந்
திற்றைநாண்மட்டிரங்காதவென்வயி
றுற்றபாவமொழிந்தனையோவென்றான்.

இ-ள். நான் விலைக்குவிற்றபோது என்னுடம்பை அணைத்துக்கொண்டிருந்த வுன்னைப்பற்றி அந்தப்பிராமணனிழுத்துக்கொண்டுபோனதையும் பார்த்துக்கொண்டிருந்தும், இன்றைத்தினம் வரையிலும் உன்னிடத்திலிரக்கமில்லாதிருந்த என்னிடத்திலே நீ பிறந்தபாவத்தை இன்று தீர்த்துக்கொண்டாயோவென்றான். எ-று. (௫௧)

விலைபட்டாய்ப்பட்டும்வெவ்வரவாய்ப்பட்டுத்
தொலைபட்டாயன்னைதோளிற்கொணர்ந்திடத்
தலைபட்டாய்தமியேனொழியத்தகர்ந்
தலைபட்டாயிதுவோவிதியையனே.

இ-ள். நீயோ விலைபானாய்; அப்படி விலையாகியும் ஒரு வெவ்விதான பாம்பின்வாய்க்குள்ளாயிறந்தாய்; பின்பு உனது தாயானவள்,

சார்த்திக்கொண்டுவர அவன் தோளுக்குள்ளானாய்; இப்போது நான் நூக்கியெறிய அதனாலே சிதைதலாய் அலைச்சற்பட்டாய். என் அப்பனே! உனக்கிப்படியா விதியிருந்தது? எ-று. (௩௬)

காதலாலுனைக்காணுத தாயையு
மீதெலாம்வினைத்தெற்றியவென்னையு
மீதெலாமரவின்விடமேயநா
ளேதெலாமுரைத்தாயுரையேந்தலே.

இ-ள். அன்பினாலே உன்னைக் கூடவேவந்து கண்டுகொள்ளாத உன் மாதாவையும், இதெல்லாஞ்செய்து இப்போ தேடித்தெறிக்க வென்னையும் உன்னுடம்பெல்லாம் பாம்பின் விட மேறுகிறபோது புத்திரா! (நீ அப்போது) என்னென்ன சொற்களெல்லாஞ் சொன்னாய்? அவற்றை இப்போது சொல்வாயாக. எ-று. (௩௭)

பிறப்புணர்ந்தவன்றேபிறிதன்றியு
மிறப்புணர்ந்தனமென்னினுமெம்முனோர்
சிறப்புஞ்செல்வமுஞ்சேர்தலிற்றீர்ந்தவா
றறப்பெரும்பிழையென்றென்றழுங்கினான்.

இ-ள். உன் சன்ம மிப்படிப்பட்டதென்று தெரிந்த அப்போதே வேறுபாடில்லாமல் உனது சாவுந்தெரிந்தோமானாலும் எங்களுக்கு முன்னோர்கள் பெற்றிருந்த சிறப்புஞ் செல்வமுஞ் சேர்ந்திருப்பதினின்றும் நீங்கினபடி மிகவும் பெரிதான பாவம் பாவமென்று வருந்தினான். எ-று.

வாளின்மிக்கவயமன்னர்வந்துநின்
றாளில்வீழ்ந்தழலின்றிநின்றாய்திருத்
தோளிலேற்றிச்சுடலையிலேவர
வேளின்மிக்கவவெவ்வினையோவென்றான்.

இ-ள். வாள்வலியாலுயர்ந்த வெற்றிகொண்ட அரசர்கள்வந்து உன் காலிலேவிழுந் தழுகிறதில்லாமல் உன் தாயானவள் தன் திருத்தோளின் மேலேற்றிக்கொண்டு சுடுகாட்டுக்குவர மன்மதனிலும் அழகாற் சிறந்த குமாரா! எந்த வெவ்விதான பாவஞ் செய்தாயோவென் றழுதான். எ-று.

இன்னவாறுரைத்தேங்கிடவேந்திழை
தன்னகத்திலுணர்ச்சிதழைத்திட
மன்னனேயிவனென்றுமதித்தவள்
பொன்னடித்துணைபூண்டழுதோதுவாள்.

இ-ள். இந்தப்படிசொல்லி அரசனழும்போது சந்திரமதியானவள் தன்மனத்திலே தெளிவுதோன்ற நமதரசனே இவனென்றுணிந்து அவ்வரசனுடைய அழகிய பாதங்களிரண்டையும் பிடித்துக்கொண்டழுது சொல்லுகிறாள். எ-று. (௩௮)

கொதித்தெழுந்துபடாகுடிகொண்டுளங்
கதித்தழுவயிற்கண்டனனுத்தம

விதித்ததல்லநும்வேறனுகாதென
மதித்திருநுதல்வல்லிவிளம்பினாள்.

இ-ள். பொங்குதலாய்த் துன்பமே குடிகொண்டு உமது மனத்திலே அதிகமானபடியை உம்மிடத்திலேதான் கண்டேன். ஓ புருஷோத்தமரே! யார்க்கானாலும் லபிதபடியேயல்லாமல் வேறே ஒன்றும் வாராதென்று பாதிச்சந்திரன் போலும் திருநெற்றியையுடைய சந்திரமதி சொன்னாள்.

தீமைசெய்ததுனக்குஞ்சிறுவற்கும்
வாய்மைதானதுமண்ணுக்கும்விண்ணுக்குந்
தூய்மையேயினியென்றுதுணிந்தன
னீமயங்கலறத்தைநினையென்றாள்.

இ-ள். பாவங்களைச் செய்திருந்தது உமக்கும் பிள்ளைக்கும் மெய்யானதே; அந்தப்பாவம் இந்த மண்ணுலகத்துக்கும் விண்ணுலகத்துக்கும் இனிநன்மையாகவே முடியுமென்று நான் துணிவுகொண்டேன். நீர் இனி மயங்கவேண்டாம். உமது சுதர்மத்தை யெண்ணிக்கொள்ளுமென்று சொன்னாள். எ-று. (௬௰)

தோகைகேள்புலையற்குத்தொழும்பனு
னைகையான்மற்றவன்பணிநீத்தவ
னீகையாளிழந்தாற்றவரெய்திடும்
போகைநன்றுபொருட்குதற்கென்றான்.

இ-ள். பெண்ணே! கேட்பாயாக: இந்தச் சுடுகாட்டுக்குரிய பறையனுக்கு நான் அடிமையாதலாலே அவன் உத்தரவைக்கடந்து அவன் பொருளை நான் வாங்காமல்விட்டால் நீதிக்கு வழுவுதலாகும் நீபொருள் கொடுப்பதற்காக இவ்விடம் விட்டுப்போகிறதே நல்லகாரியமென்று சொன்னான். எ-று. (௬௧)

உன்னையாளுமறையவற்குற்றது
சொன்னகாலந்தரினந்தத்துசொடு
பொன்னைவாங்கியளித்துநின்புத்திரன்
றன்னைநீசுடத்தக்கதுனக்கென்றான்.

இ-ள். உன்னை அடிமையாகக் கொண்டாளுகிற பிராமணனிடத்திற்குப்போய் இந்தப்பொருள் கொடுக்கவேண்டியபடியை நீ சொன்னபோது, அந்தப் பிராமணன் கொடுத்தால் அந்தக் கொள்ளிவஸ்திரத்துடனே பணமும்வாங்கிவந்து கொடுத்து உன்புத்திரனை நீ தகனஞ்செயது கொள்ளத்தகு முனக்கென்று பின்னுஞ் சொன்னான். எ-று. ()

அரக்கெனச்சிவப்புற்றவெழுற்கண
னிறக்கமற்பமுமில்லவனிப்பொரு
ளக்கருத்திலன்றந்திடிற்காண்பனென்
றுரைந்தவல்லிமகனைவைத்தோடினாள்.

